உ

சிவமயம்.

மண்டலபுருடன்

அருளிச்செய்த

# சூடாமணி உள்ளமுடையான்.

மூலமும் - உரையும்.

இஃது

திருசிரபுரம் - குருலிங்க தேசிகரவர்களால்

பார்வையிடப்பட்டு,

எஸ். பி. இராஜாராம்

அவர்களது

சென்னை-சூளை, ஸன் ஆப் இந்தியா பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1923. [ரூபா 1.

நெ-14, ஆரிமுத்துமேஸ்திரி தெரு, சென்னை சூளை.

உ

ஓம்நமோஸ்து.

# சூடாமணி உள்ளமுடையான்

## மூலமும் - உரையும்.

### விநாயகர் தோத்திரம்.

ஐவினையியல்முகூர்த்தம் அருளுள்ளமுடையான்கூற
மெய்யனைமுக்கணனை விக்கினேஸ்வரனைவேழக்
கையனையாகுவாகனனைக் கார்க்குந்தாளானைக்கற்றோர்
துய்யனைப்பதினுருமச் சொரூபனைவணக்கஞ்செய்வாம். 1

### பிரமன் துதி.

உலகொருமூன்றுமேத்த வுயர்மறைநான்குமெண்ணெண்
கலைகளுந்தெரியுமங்க மறையவர்கசிந்துபோற்ற
பொலன்மலியுயிர்கள்யாவும் பூமியிற்படைத்தபிரம்மன்
மலரடிபணியவென்றன் மனத்தினின்முடியுமாதோ 2

### சத்திகள் நவக்கோள்கள் குருவணக்கம்.

காயத்ரிசாவித்ரீயும் கலைவாணிகங்கைநாமம்
மேயநல்வுலகமாத ரெழுவகைவிரும்பிப்போற்றி
ஆயநற்கதிர்நவக்கோ ளவைகளைவணக்கஞ்செய்து
தூயநற்கணிதமியாவும் சொல்குருவணக்கஞ்செய்வாம். 3

### அவையடக்கம்.

மாதவர்முன்புசொன்ன வடமொழிக்கணிதநூலைத்
தீதறுதமிழாற்செப்ப விசைந்ததென்போலென்னிற்
சோதிமின்மினிட்டம்போலச் சொல்லுதற்கெண்ணியூம
னோதியிவ்வுலகுக்கேற்ப வுரைப்பனென்றிசைந்ததொப்பாம். 4

### பாயிரம்.

ஒப்பில்நாளோரைவாரந் திதியோகங்கரணம்பேருந்
தப்பிலாவிதானஞ்சார்ந்த தற்காலநன்மைதீமை
செப்பிலன்பிடித்தலுண்ணல் கோசரந்தெசாபலன்கள்
துப்புடைநவக்கோளெண்கோள் சடரிவைசொல்லுற்றேன். 5

இ-ள். நாட்கள் சாலஹோரை வாரம் திதி யோகம் கரணங்களின் பேரும், அவைகளின் சுபாசுபங்களும், நட்பாட்சி யுச்சப்பகை நீசங்களும் அம்சங்களும் திரேகாணகுணமும் கோட்டாறு கடற்செலவு முகூர்த்த விதானங்களும், கிரஹணனந்தமாகத் தொகுத்து ஒருகோர்வைப படுத்திச் சொல்லுவனென்றவாறு. 6

## ஆக்கியோன் பெயர்.

உற்றுலகுய்யவந்தா னருளுள்ளமுடையான் மங்கை
கொற்றவன்புகழ்போலிந்தக் குவலயமுழுதுங்கேட்கச்
சொற்றவநூற்பேருள்ள முடைச்சூடாமணியென்றிட்டுப்
பொற்றொடிவளைக்கைநல்லாய் புலவர்முன்புகலலுற்றேன்.

இ-ள். நூற்பெயர் பெறுமிடத்துச்செய்தோன் பெயராலுஞ் செய்வித்தோன் பெயராலு மளவினாலிடுதியினாற் குறியினா லிடுகுறியினாலுஞ் சிறப்பினாலும் பெயர்பெறுமாதலி, னிந்நூல் செய்தோன்பெயராலே உள்ளமுடைச் சூடாமணியென்று அவன்பெயராலுரைப்பன் என்றவாறு. 7

---

# நூல் வரலாறு.

---

## நட்சத்திரநிகண்டு.

புகலுறுபரிமாவாசி புரவியேறாகஞ்சென்னி
இகலுறுகுதிரைமுந்நா ளிரலையைப் பசியின்பேராம்
மகவியதாழிபூத மடுப்பொடு தராசுகங்குல்
பகல்வறுகிழவன்சோறு பரணியின்பெயராகுமே.

இ-ள். பரி மா வாசி புரவி தூரகம் சென்னி குதிரை முந்நாள் இரலை இவை அச்சுவினியின்பெயர், தாழி பூதம் அடுப்பு தராசு கங்குல் கிழவன் சோறு இவை பரணியின் பெயர். 1

ஆரலேயழலேயங்கி அளகிராலறுமீனாவி
சீர்கொள்கார்த்திகைப்பேராகுந் தேருருளயனாள்வையம்
பார்சகடுரோகணிப்பேர் பாவுமான்றலையைந்தானம்
மார்கழிமதிபோராளன் நரிப்புறமிருகசீரப்பேர்.

இ-ள். ஆரல் அழல் அங்கி அளகு இரால் அறுமீன் ஆவி இவை கார்த்திகையின்பெயர், தேருருள் அயனாள் வையம் சகடு உரோகணியின் பெயர். மான்றலை ஐந்தானம் மார்கழி மதிகோராளன் நரிப்புறம் இவை மிருகசீரிடத்தின் பெயர், 2

பேரிறைசெங்கையாழ்வில் லாதிரைப்பெயராம்பிண்டி
கார்திரள்மூங்கில்மாலே கரும்பொடாவணமேவிண்டல்
கூரியபுனர்தமாகுங் குடந்தராகொடிறுதையம்
பார்மதிபூசப்பேராம் பணிநாள்கவ்வைபாம்பாயில்யம்.

இ-ள். இறை செங்கை யாழ் வில் இவை திருவாதிரையின்பெயர், பிண்டிகார் திரள் மூங்கில் மாலே கரும்பு ஆவணம் விண்டம் புனர்தம் இவை புனர்பூசத்தின்பெயர், குடம் தரா கொடிறு தையம் மதி இவை பூசத்தின் பெயர், அரவிஞள் கவ்வை பாம்பு இவை ஆயிலியத்தின் பெயர், எ-று. 3

பாவுமுற்சனியேவாய்க்கால் வேட்டுவனெழிலிபாரிற்
கூவியஞமலிமாசி கொடுநுகமகப்பேர்தூர்க்கை
நாவிதனெலியேமாற்றை யிடைச்சனிபூரமும
மோவில்பாற்குனிபங்குனி கடைச்சனியுத்தரப்பேர்.

இ-ள். முற்சனி வாய்க்கால் வேட்டுவன் எழிலி ஞமலி மாசி கொடு நுகம் இவைமகத்தின்பெயர், தூர்க்கை நாவிதன் எலி இடைச்சனி இவை பூரத்தின்பெயர், பாற்குனி பங்குனி கடைச்சனி இவை யுத்தரத்தின் பெயர், எ-று. 4

உத்தமக்களிறுநவ்வி யுயர்கௌத்துவமாங்கைம்மீன்
அத்தமென்கன்னியாடை யாம்பரம்பயறுநெய்மீன்
சித்திரப்பெயர்மரக்கால் பதுமமேதீபஞ்சோதி
மொத்தவைகாசிமுற்றில் சுளகுடன்முறம்விசாகம்.

இ-ள். களிறு நவ்வி கௌத்துவம் கைம்மீன் இவையத்தத்தின்பெயர், கன்னி ஆடை ஆம்பரம் பயறு நெய் மீன் இவை சித்திரையின்பெயர் மரக்கால் பதுமம் தீபம் இவை சோதியின்பெயர், வைகாசி முற்றில் சுளகு முறம் இவை விசாகத்தின்பெயர், எ-று. 5

விரைகொள்புற்குளிபுன்றேள் மெய்ப்பெண்ணையனுடப்பேரா
மரைசில்வல்லாரைவாளி துடங்கொளிகேட்டையாகுந்
திசையுறுகுருகுகொக்கு தேட்கடையானிமூலம்
வசையிலாக்குளமேபொய்கை வாவிபூராடமாமே.

இ-ள். புல் தாளி தேள் பெண்ணை இவை அனுடத்தின்பெயர், வல்லாரை வாளி துடங்கொளி இவை கேட்டையின்பெயர், குருகு கொக்கு தேட்கடை ஆனி இவை மூலத்தின்பெயர், குளம் பொய்கை வாவி இவை பூராடத்தின்பெயர், எ-று. 6

மானெனிற்குளமேகூவன் மணிமுடியாடையூர்தி
கானவுத்தராடஞ்சோணை சிரவணமுலக்கையோண
மானபுட்பறவைகாக்கை யாவணியவிட்டப்பேராந்
தேனனாய்சுண்டன்குன்று செக்கிவைசதையஞ்செப்பே.

இ-ள். குளம் கூவல் மணி முடி ஆடை ஊர்தி இவை உத்தராடத்தின்பெயர், சோணை சிரவணம் உலக்கை இவை திருவோணத்தின்பெயர், புள் பறவை காக்கை ஆவணி இவை அவிட்டத்தின்பெயர், சுண்டன் குன்று செக்கு இவை சதயத்தின் பெயர், எ-று. 7

செவ்வியகொழுங்கோல்நாழி புரட்டைசேர்பூரட்டாதி
யவ்வியமுரசுவேந்த னறிவனுத்தரட்டாதிப்பேர்
வவ்வியகடைமீன்தோணி மரக்கலஞ்சூலம்நாவாய்
கவ்விதரேவதிப்பே ரவைதினம்நாட்பொதுப்பேர்.

இ-ள். கொழுங்கோல் நாழி புரட்டை இவை பூரட்டாதியின்பெயர், முரசு வேந்தன் அறிவன் இவை உத்தராடத்தியின்பெயர், கடைமீன் தோணி மரக்கலம் சூலம் நாவாய் இவை ரேவதியின்பெயர், தினம் நாள் இவை பொதுப் பெயர், எ-று. 8

இராசி நிகண்டு.

பேர்மறிதகர்வற்காலி பெரியமேழம்பின்கொச்சை
கூறியமொல்லைமொத்தை பகுமுரிகுண்டைபாண்டில்
சீறியவிடையேபுல்லஞ் சேவெருதிடபப்பேராந்
தாரமேகவிஞைவீணை தண்டியாழ்மிதுனந்தானே.

இ-ள். மறி தகர் வற்காலி மேழகம் கொச்சை மொல்லை மொத்தை இவைமேடத்திற்கும், குண்டை பாண்டில் விடை புல்லம் சே எருது இவை யிடபத்திற்கும், தாரம் கவ்ஞை வீணை தண்டு யாழ் இவை மிதுனத்திற்கும், எ-று. 9

தாணநண்டலவனள்ளி குளிர்சேக்கைஞெண்டுகொண்டே
லானநற்கடகப்பேரா மாளரிமலைமாச்சீயங்
கானமாப்புலியேகோன்மாக் கடுவனுஞ்சிங்கப்பேராந்
தேன்மொழிமாதுஙதையல் சேடிபெண்தெரிவைகன்னி.

இ-ள். நண்டு அலவன் நள்ளி சேக்கை ஞெண்டு கொண்டல் இவை கற்கடகப்பெயர், ஆள் அரி மலைமா சீயம் புலி கோன்மா கடுவன்

இவை சிங்கத்தின்பெயர், மாது தையல் சேடி பெண்தெரிவை இவை கன்னியின்பெயர், எ-று. 10

கன்னிகோல்நிறைகோல்தூங்கல் கட்டளைவணிகன்செட்டி
துன்னியதுலாத்தின்பேராந் துடர்மணிவிட்டந்துட்டன்
மன்னியன்தெறுக்காற்புன்றேள் விருச்சிகப்பேராம்வில்லு
மன்னியசிலைகாண்டீபங் கார்முகத்தனுவென்மானே.

இ-ள். நிறை கோல் தூங்கல் கட்டளை வணிகன் செட்டி இவை துலாத்திற்கும், துஷ்டன் தெறுக்கால் விருச்சிகத்தின்பெயர், வில்லுசிலை காண்டீபம் கார்முகம் இவை தனுசுக்கும்பெயர், எ-று. 11

மான்கலைபுல்வாய்கேது வளர்சுறுமகரமாகுங்
கூன்குடல்கலசஞ்சாடி குட்டுவங்கும்பப்பேராம்
மீன்கயல்சேலேகெண்டை மீனபேரிராசிக்கெல்லாம்
தேங்கமழ்குழலாயோரை பொதுப்பெயர்திதியின்பக்கம்.

இ-ள். மான் கலை புல் வாய் கேது சுறு இவை மகரத்திற்கும் குடம் கலசம் சாடி குட்டுவம் இவை கும்பத்திற்கும் மீன் கயல் சேல்கெண்டை இவை மீனத்திற்கும்பெயர், ஓரை இராசியின் பொதுப்பெயர், திதிபக்கமென்றும்பெயர். 12

கிரக நிகண்டு.

பக்கரைபரியேழூர்தி பகலவன்பரிதியென்றாழ்
திக்கிலாப்புண்டரீகன் திவாகரனருக்கன்பானு
மிக்கமார்த்தண்டன்வெய்யோன் றினகரனிரவிவிண்ணிற்
செக்கராதித்தஞாயி லலரிசூரியன்பேர்சொல்லே.

இ-ள். பக்கரை பரியேழூர்தி பகலவன் பரிதிஎன்றாழ் புண்டரீகன் திவாகரன் அருக்கன் பானு மார்த்தாண்டன வெய்யோன் திவாகரன் ரவி ஆதித்தன் ஞாயிறு அலரி இவை சூரியன்பெயர், எ-று. 13

சொல்லரும்பிறையேயிந்து சந்திரன்சசியேசோமன்
நல்லெழுமதிஞட்கேழ்வ னம்புலிநிலாத்திங்கட்பேர்
சொல்லுமங்காரகன்சேய் நிலமகன்குசன்தீயாரல்
வல்லிசேரிடையாய்பூமன் வக்கிரன்குருதிசெவ்வாய்,

இ-ள். பிறை இந்து சந்திரன் சசி சோமன் மதிநாட்கேழ்வன் அம்புலி நிலா திங்களென்க அங்காரகன் சேய் நிலமகன் அங்குசன் தீ ஆரல் பூமன் வக்கிரன் குருதி இவை செவ்வாயின்பெயர், எ-று. 14

செவ்வியகணக்கன்புந்தி மதிமகனருணன்சீர்மால்
தவ்வலில்புலவன்தூதன் மேதைகாமன்புதனே
ரெவ்வமில்குருபொன்சீவன் பீதகனிறைவன்பார்ப்பான்
மவ்வலங்குழலாய்வானோர் மந்திரிவியாழமாமன்பே.

இ-ள். கணக்கன் புந்தி மதிமகன் அருணன் மால் புலவன் தூதன் மேதைகாமன் இவை புதனுக்கும் குரு பொன் சீவன் பீதகன் இறைவன் பார்ப்பான் மந்திரி இவை வியாழத்திற்கும்பெயர், எ-று. 15

மாண்புகர்பிருகுசுங்கன் சுக்கிரன்சிதன்மழைக்கோள்
மூண்டபார்க்கவனேவெள்ளி முதுமகன்முடவனீலன்
காண்டகுபங்குகாரி கரியவன்கதிர்சேய்மந்தன்
கூண்டசுன்சனிப்பேர்நாக மிராகுப்பேர்கொடியோன்கேது.

இ-ள். புகர் பிருகு சுங்கன் சுக்கிரன் சிதன் மழைக்கோன் பார்க்கவன் இவை வெள்ளிக்கும்,முதுமகன் முடவன் நீலன் பங்குகாரி கரியவன் கதிர் சேய் மந்தன் சுன் இவைசனிக்கும், நாகம் இராகுவுக்கும் கொடியோன் கேதுவிற்கும்பெயர், எ-று. 16

## தெத்தயோகம்.

கொடுங்கதிர்தனக்கீராறு குளிர்மதிதனக்குப்பன்னொன்
றடுஞ்செவ்வாய்க்கஞ்சுமேதைக் கிரண்டுபொன்னவனுக்காறு
நெடும்புகழ்கெட்டுநீலற் கொன்பதுநிகழ்ந்தபக்கம்
படர்ந்தவைதெத்தயோகந் திதென்பர்பலருமன்னே.

இ-ள். ஞாயிறு துவாதசியும், திங்கள் ஏகாதசியும், செவ்வாய் பஞ்சமியும், புதன் ரவிதியையும், வியாழம் சஷ்டியும், வெள்ளி அஷ்டமியும், சனி நவமியும், இவைதெத்தயோகம், சுபகன்மங்களுக்காகாது, எ-று. 17

## அமிர்தயோகம் மரணயோகம்.

பலமுடைமூலவோண மிரேவதியத்தம்பாரில்
நலமுடையுத்திரங்கள் மூன்றுநன் றருக்கன் றன்னில்
குலவியவனுடன்கேட்டை கொடுநாகம்விசாகம்விட்டஞ்
சலமுடையருக்கன்வாரஞ் சார்ந்திடில்மரணந்தானே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமையில் மூலமும் திருவோணம் இரேவதி அத்தம் உத்திரதிரையம் இவைவரில் அமிர்தயோகம், இவ்வாரத்தில் அனுடம் கேட்டை மகம் விசாகம் அவிட்டம் இவைவரில் மரணயோகம், எ-று. 18

தானையான்றலையேசோதி சாருருள்புநர்தமோணம்
மானனுள்திங்கள்சேரி லமிர்தமாயோகமாகும்
கானமாமகம்பிசாகம் கார்த்திகைபூரட்டாதி
மானநாளுத்திராட மிவைரில்மரணமென்றே.

இ-ள். மிருகசீரிடம் சோதி ரோகணி புநர்பூசம் திருவோணம் இவையுடன் திங்கள் சேரில் அமிர்த யோகமாம். இவ்வாரத்தில் அசுவனி மகம் விசாகம் கார்த்திகை பூரட்டாதி உத்தராடம் இவை சேரில் மரணயோகம், எ-று 19

அன்றியவுரோணிமூலம் அறிவனுத்திரத்திற்செவ்வாய்
நின்றிடிலமிர்தயோகம் நிறைந்தவான்சதையஞ்செங்கை
வென்றியவிசாகம்பூரட் டாதியைவிரும்பினுந்
கன்றியசெவ்வாய்நின்றாற் கருமங்கள்நாசங்காணே.

இ-ள். செவ்வாய்க்கிழமையில், ரோகணி மூலம் உத்திரதிரையம் சேரில் அமிர்தயோகமாம், இவ்வாரத்தில் சதையம் திருவாதிரை விசாகம் பூரட்டாதி இவைசேரில் மரணயோகம், எ-று. 20

காணுமுப்பூரமாடி கார்த்திகையுத்திரத்தில்
பூண்மூலமடைவாய்புந்தி வந்திடிற்புகழ்வர்சால
வாணியாவிட்டமூல மிரேவதிருதிரையத்தந்
சேணுறுபுந்திவந்தாற் செய்யுமக்கருமந்தீதே.

இ-ள். புதவாரத்தில் முப்பூரம் உத்திராடம் கார்த்திகை உத்திரம் இவை சேரில் அமிர்தயோகமென்க இவ்வாரத்தில் அவிட்டம் மூலம் இரேவதி அசுவினி அத்தம் இவைசேரின் மரணயோகம், எ-று. 21

கரும்பொடுசோதிபூச மைப்பசிமகத்திற்கற்றோர்
விரும்பியவியாழநின்றால் விளம்புவாரமுதமென்று
திருந்துமான்றலைபார்செங்கு செங்கையுத்திரத்தோராடல்
சுரும்பமர்குழலாய்பொன்னன் வந்திடிற்றுயரஞ்சொல்லே.

இ-ள். வியாழக்கிழமையில் புநர்பூசம் சோதி பூசம் அசுவனி மகம் இவைசேரில் அமிர்தயோகமென்க. இவ்வாரத்தில் மிருகசீரிடம் ரோகணி

சதையம் திருவாதிரை உத்திரம் கார்த்திகை இவைசேரில் மரண யோகம், எ-று. 22

சொல்லருமூலமத்த மிரேவதி சுவாதியங்கள்
புல்லிடலமுதயோகப் பூசமோடுரோணிசேட்டை
மல்குமோரோணமாயில் மகத்தினில்வெள்ளிவந்தால்
அல்லிருங்குழலாய்தீதென் றறிந்தனர்தமிழையாய்ந்தோர்.

இ-ள். வெள்ளிக்கிழமையில் மூலம் அத்தம் இரேவதி அச்சுவனி இவைசேரில் அமிர்யோகமென்க. இவ்வாரத்தில் பூசம் ரோகணி கேட்டை திருவோணம் ஆயிலியம் மகம் இவைசேரில் மரணயோகம், எ-று. 23

ஆய்ந்தசீர்மகமேசோதி யாரல்பார்சதையங்காரி
சேர்ந்திடலமிர்தமத்தகு சித்திரைபுரட்டைநாவாய்
வாய்ந்தவுத்திரத்தோடாயில் சனிவரில்மரணமென்க
சேர்ந்ததிற்சொல்லநாட்கள் சித்தயோகப்பேர்செப்பே.

இ-ள். சனிக்கிழமையில் மகம் சோதி கார்த்திகை ரோகணி சதையம் இவைச்சேரில் அமிர்தயோகம். இவ்வாரத்தில் அத்தம் சித்திரை பூரட்டாதி ரேவதி உத்திரம் ஆயிலியம் இவைசேரில், மரணயோகம், எ-று. 24

திதி அமிர்தயோகம்.

செப்பியகுருவுக்கொன்பா னொன்குபன்னொன்குசேய்க்கு
வெப்புறுகதிர்க்குமன்றே டாறுபன்னொன்றுவெள்ளிக்
கொப்புடைமதிக்குமீரு றேழிரண்டுயர்ந்தபுந்திக்
கப்பதின்மூன்றுமூன்று மெட்டுநல்லமுதயோகம்.

இ-ள். வியாழத்திற்கு நவமி சதுர்த்தியம் சதுர்த்தி செவ்வாய்க்கும், ஞாயிறுக்கு பிரதமையும் சஷ்டியும், ஏகாதசி வெள்ளிக்கும் திங்களுக்கும், துவாதசியும் சத்தமியும் துவிதியையும், புதனுக்கு திரயோதசியும், திரிதியையும் அஷ்டமியும் அமிர்தயோகம், எ-று. 25

வாரசித்தயோகம்.

யோகம்நன்றிரவியத்த முயர்மதிவான்பேராளன்
வேகவங்காரஞ்சென்னி மேதைசோதியுஷம்விண்ணோர்

ஏகமந்திரிசேர்பூச மிரும்புகர்வாரந்தோனில்
மாகவான்சனியுரோணி சித்திபென்மயிலேயன்றாய்.

இ-ள். ஞாயிறு அத்தம் திங்கள் மிருகசீரிடம் செவ்வாய் அசுவனி புதன் அனுடம் வியாழம் பூசம் வெள்ளி இரேவதி சனி ரோகணி சித்த யோகம், எ-று. 26

சுபயோகம்.

அன்னமேபகுதிக்கொட்டா மம்புலிக்கொன்பான்செய்க்குந்
மன்னியவிருமூன்றகு மாலவற்கொருமூன்றாகும்
பொன்னவன்றனக்குப்பக்கம் பதினொன்றுபுகற்குப்பன்மூ
வின்னல்செய்சனிக்குப்பன்னான்கிவை சுபயோகமென்னே.

இ-ள். ஞாயிறு அஷ்டமியும் திங்கள் நவமியும் செவ்வாய் சஷ்டியும் புதன் திரிதியையும் வியாழம் ஏகாதசியும் வெள்ளி திரயோதசியும் சனி சதுர்த்தசியும் இப்படி வரிலிவை சுபயோகம், எ-று. 27

நாசயோகம்.

என்றுமீடிருநீர்சீறு மித்துவுக்காறுவெள்ளி
கொன்றியநவமிமேதைக் கிரண்டொளியவற்குநாலு
கொன்றனக்கெட்டுநீலப் பூமனுக்கேழுபொல்லாக்
கன்றிடுநாசயோக மென்றறிகதிர்வேற்கண்ணாய்.

இ-ள். திங்கள் சஷ்டியும், வெள்ளி நவமியும், புதன் துவிதியையும், ஞாயிறு சதுர்த்தியும், வியாழம் அஷ்டமியும், சனி செவ்வாய்க்கு சத்தமியும், இப்படிவரில் நாசயோகம், எ-று. 28

கதிரவற்கைக்தோடால் கணக்கற்கேள்பரணிகாரி
எதிருறுமெட்டுத்தோணி யெரிக்குமன்னுவர்வுரோணி
புதியபொன்றனக்குப்பன்மூன் றனுடமாம்புகற்காரேண
மதியவற்கிரண்டாம்பக்கஞ் சித்திரைமருவில்நாசம்

இ-ள். ஞாயிறு பஞ்சமி கார்த்திகையும், புதன் சத்தமி பரணியும், சனி அஷ்டமி ரேவதியும், செவ்வாய் பூரணை ரோகணியும், வியாழம் திரயோதசி அனுடமும், வெள்ளி சஷ்டி திருவோணமும், திங்கள் விதியை சித்திரையும், இப்படிவரில் நாசயோகம், எ-று. 29

மருவியகதிர்விசாக மதிவருசதயஞ்செவ்வாய்
பொருவியவிட்டன்புந்தி ரேவதிபொன்னுரோணி
பெருகுவிற்பூசங்காறி யுத்திரம்பேணிவந்தா
லருவிலவிநாசமென்று றறியநூல்தெரிந்தரிந்தோர்.

இ-ள். ஞாயிறு விசாகமும், திங்கள் சதையமும், செவ்வா யவிட்டமும், புதன் ரேவதி, வியாழம் ரோகணியும், வெள்ளி பூசமும், சனி உத்திரமாகவரில் நாசயோகம், எ-று. 30

## சத்தயோகம்.

அருக்கன்முன் சனியீறாக முறம்பொய்கையவிட்டத்தோணி
யுருகுடமுத்திரத்தோ டுதித்தவாரத்திநின்று
தெரிந்தநாளளவுமெண்ணி யேழுக்கீந்தியாச்சேட
மிருத்தைநாசஞ்சாவின்பஞ் சகஞ்சித்திபிரிசமென்னே.

இ-ள். ஞாயிறுமுதல் சனியீறாக விசாகம் பூராடம் அவிட்டம் ரேவதி ரோகணி பூசம் உத்திரம் இந்நாள்முதலாக அவற்றை வாரத்திலுற்ற காளளவு மெண்ணினதொகையை ஏழுக்கீந்து மீயாதசேடம் ஒன்றாகில் இருத்தை உ-ஆகில் அமிர்தம், ௩-ஆகில் சுபம், ௪-ஆகில் சித்தியோகம், ௫-ஆகில் பிரிதியோகமென் றிப்படிப் பார்த்துக்கொள்ளுவது அபிசித்துக்கூட்டி யெண்ணுவது, எ-று. 31

## அக்கினியோகம்.

பிரசவெண்டிங்கட்காறு பெரியசேய்க்கேழுமாலுக்
குறைசெய்தாரெட்டுப்பொன்னுக் கொன்பதுபார்க்குப்பத்து
பரியகன்னுக்குப்பன்னேன் றருக்கற்கீராறுபக்கம்
விரைசெய்பூங்குழலாயக்கி யோகமென்றிசைத்தார்நூலோர்.

இ-ள். திங்கள் சஷ்டி, செவ்வாய் சத்தமி, புதன் அஷ்டமி, வியாழம் நவமி, வெள்ளி தசமி, சனி ஏகாதசி, ஞாயிறு துவாதசி, இப்படி வரில் இவை அக்கினியோகம், எ-று. (சுபகன்மங்களுக்காகாது) 32

## எமகண்டயோகம்.

நூல்கதிர்மகமும்பூரம் நுண்மதிபூசம்பாம்பு
ஆலங்கியனுடமாரல் அறிஞன்மான்றலையுமத்தம்
நூலவன்தோணிமூலம் நுண்வெள்ளிசகடுசோதி
காலசனிவோணம்விட்டம் எமகண்டங்கழித்தார்மேலோர்.

இ-ள். ஞாயிறு மகம் பூரம், திங்கள் பூசம் ஆயிலியம், செவ்வாய் அனுஷம் கார்த்திகை, புதன் மிருகசீரிடம் அத்தம், வியாழம் இரேவதி மூலம், வெள்ளி ரோகணி சோதி, சனி திருவோணம் அவிட்டம் இவை எமகண்டயோகமென்றறிக. எ-று. (சுபகன்மங்களுக்காகாது) 33

## சகடயோகம்.

மேலெழுவியாழநின்ற விராசிக்காறீராறொட்டில்
மாலெவெண்மதியஞ்சேரில் வந்தநாட்சகடயோகம்
பாலகன்பிறக்கிற்சாவாம் பழிபடுமணத்தைச்செய்யில்
ஞாலமேல்வழியைப்போகில் நலமில்லைசாற்றின்சொம்பே.

இ-ள். வியாழம் நின்றராசிக்கு, ௯-மிடத்திலும், ௧௨-மிடத்திலும், ௮-மிடத்திலும், சந்திரகிரகம்வரும்நாள் சகடயோகம், இதன்பலன் பாலகன் பிறக்கிற்சாவு, மணஞ்செயில் வழிபோகில் நன்மையில்லை, எ-று. (சுபகன்மங்களுக்குத் தவிரப் படுமென்க) 34

## பிரதியோகத்தின் பெயர்.

நறுங்கம்பம்தரிசம்வானுன் புண்ணியம்மணமாகண்ட
மறந்துணைச்சூலகண்ட மார்க்கமூணறவேடோற்றுங்
கறங்கியில்சித்திகோறல் பெறுகாயம்பரிசங்காட்சி
திறப்புகழ்காவல்வாய்ப்புத் திசைமுகனிந்திரன்பேய்.

இ-ள். கம்பம் விடகம்பம், பிரிசம், பிரீதி, வானுள் ஆயுட்மானம் புண்ணியம் சௌபாக்கியம் மணம் சோபனம், ஆகண்டம் அதிகண்டம், அறம் சுகர்மமம், துணை திருதிசூலம் சூலம்கண்டம் கண்டம் ஆக்கம் விருத்தி மைண்துருவம், அறவு வியாகாதம் எற்றம் அரிசனம் அயில்வச்சிரம் சித்தி கோறல் விதிபாதகம் பெருமாயும் வகறியான், பரிசம் பரிசம்காட்சி சிவம் திறம் சித்தல் புகழ் சாத்தியம்காவல் வாய்ப்பு சுப்பிரம் திசைமுகன் பிர்மா இந்திரன் மாகேந்திரம் பேய்வைத்திருதி இப்படி யிருபத்தேழு பிரிதியோகமுங்கண்டு கொள்வது, எ-று. 35

## விஷயோகம்.

பேயுடன்பரிசங்கோறல் பெரும்பாம்புசூலங்கம்ப
மாயமாகண்டங்கண்ட மயிலொழித்திவைகள் நன்று
மோயுமாகம்பமூன்று சூலமஞ்சாவுக்கொன்பான்
காயுமாகண்டங்கண்ட மாறுமுன்கடிகைநீக்கே.

இ-ள். பேய் பரிசம் கோறல் பாம்பு சூலம் கம்பம் ஆகண்டம் கண்டம் அயில் இவை யொன்பதுமொழிய அல்லாலவை நன்றென்பது இந்த வொன்பதிலுங் கம்பத்துக்குமூன்றும் முன்னேகழிப்பது சூலத்துக்கு ங-ம் பாம்புக்கு கூ-ம் ஆகண்டம் கண்டத்துக்கு ஆறுநாழிகை முன்னே கழிப்பதுநின்றது ஆமென்பதுபேயும் பரிசமும் கோறலும் அயிலும் ஆகாது, எ-று. 36

## சித்தயோகம்.

நீக்கியிக்கடிகைமுன்னே இவையுமாம்சித்தயோகம்
பூக்குழல்மடவாயித்தை வாக்கியத்துருவங்கூட்டி
சேர்த்ததிற்சென்றதிங்கள் திகதியின்தினத்தைச்செய்வை
பார்த்ததிலொருநாள்நீக்கி நின்றநாள்பரிந்துசொல்லே.

இ-ள். சித்தயோகம்பார்க்கும்படி அத்தை வாக்கியத்தில் திருவத்தைக்கூட்டி பிரதமையுடனே சென்றமாதமுந் தேதியுங்கூட்டி நாளைப்பார்த்து கண்டநாளிலே ஒருநாளைக்கழித்து நின்றநாளித்தனைநா ளென்றறிந்து முன்புசென்ற பிருதமைத்தேதியில் வந்தபலாபலம் பார்த்துச்சொல்வது, எ-று. 37

திவத்திதியோகம்

பரித்தவன்னுறுபக்கத்தி லொன்றேகதியேழுக்கீய்ந்தால்
திருக்கலிநந்தைகாளாஞ் செய்தனம்புகழென்றேழும்
உரைத்தனரிதனிற்காளஞ் கலியிவையொழியமற்றுத்
தெரித்தனநல்லவென்று திவைத்திதியோகஞ்செப்பே.

இ-ள். அத்தம் பக்கம் இத்தனையாம் பக்கமென்றறிந்து அதிலே ஒன்றுகூட்டி எழுக்கீய்ந்தால் நின்றசேடம் க-ஆகில் திருத்திவசம் உ-ஆகில் கலிதிவசம் ௩-ஆகில் நந்தைதிவசம் ௪-ஆகில் காளகண்டதிவசம் ரு ஆகில் சதயத்திவசம் சு-ஆகில் தனதிவசம் எ-ஆகில் புகழ்திவசம இந்த எழிலும் கலிதிவசமும் காளகண்டதிவசமும் பொல்லாது மற்றுள்ளவெல்லாம் நல்லது, எ-று. 38

வாரசூன்னியம்.

ஆதவற்கனுடங்கேட்டை மகமுறமடிப்பைபத்தானாம்
நிதமதிக்குப்பொய்கை தேள்மகம்புரட்டையாறல்
கோதறுவிசாகம்பொல்லாக் குருதிக்குவிட்டமோணம்
மேதகுசதயங்கேட்டை யாதிரைவிளம்பலாகா

இ-ள். ஞாயிற்றுக்கிழமையில் அனுடம் கேட்டை மகம் விசாகம் பரணி மிருகசீரிடம் திங்கட்கிழமையில் பூராடம் அனுடம் மகம் பூரட்டாதி கார்த்திகை விசாகம் செவ்வாய்க்கிழமையில் அவிட்டம் திருவோணம் சதயம் கேட்டை திருவாதிரை, எ-று. 39

விளம்பியபுதற்குமூல மோணமோடாவிட்டம்
இளம்பரிபரணிதீதென் றியம்பினாரணியற்கு
வளங்கொள்மானைறலேபூராட மாக்கலம்புனர்தம்பூரம்
அலங்கியமூலயாய்தீதென் றுரைத்தனர்துய்யநூலோர்.

இ-ள். புதனுக்கு மூலம் திருவோணம் கார்த்திகை அவிட்டம் அசுவனி பரணி, வியாழனுக்கு மிருகசீரிடம் பூராடம் ரேவதி புனர்பூசம் பூர மென்றவாறு. 40

துலைறிபுதற்குப்பூசம் விசாகமொன்சதுவிட்டால்
கோலமான்றலேயோடொத்தமனுடமுங்கொடுமைசெய்யும்

### சுக்கிரன்-மந்தசா.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க-க்கு | கக | எ-க்கு | ருசா | கங-க்கு | அக | ககூ-க்கு | அரு |
| உ | உக | அ | சாக | கச | அஉ | உ0 | அசா |
| ங | ங0 | கூ | சாசா | கரு | அங | உக | அசா |
| ச | ஙசா | ௰ | எ | கசா | அச | உஉ | அசா |
| ரு | ருசா | கக | எசா | கஎ | அரு | உங | அசா |
| சா | ருங | கஉ | எசா | கஅ | அரு | உச | அகூ |

### மகரசா.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க-க்கு | சாரு | எ-க்கு | சாசா0 | கங-க்கு | கஉ0சா | ககூ-க்கு | கஎஉசா |
| உ | சசா0 | அ | எருங | கச | கஉசாஎ | உ0 | கஅகக |
| ங | உஅரு | கூ | அசரு | கரு | கஙஅசா | உக | கஅசாச |
| ச | ஙஅ0 | ௰ | சாஙஎ | கசா | கசஎச | உஉ | கசாஎச |
| ரு | சஎ0 | கக | கஉ0அ | கஎ | கருருசா | உங | உ0ருஉ |
| சா | ருசாஎ | கஉ | கஎகசா | கஅ | கசாசரு | உச | உசஉசா |

### கடகசா.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க-க்கு | சாககூ | எ-க்கு | உருகூக | கங-க்கு | உஎசஉ | ககூ-க்கு | உசஎரு |
| உ | ஒகசாக | அ | உசாருஎ | கச | உஎஉ | உ0 | உசகங |
| ங | ஒசா0அ | கூ | உஎகஎ | கரு | உசாஅக | உக | உஙசஎ |
| ச | ஒசாசாச | ௰ | உஎருஉ | கசா | உகூசக | உஉ | உஉஎசா |
| ரு | உஉங0 | கக | உஎசாஎ | கஎ | உருசாக | உங | உஉச0 |
| சா | உசஉச | கஉ | உஎசாஉ | கஅ | உருஙரு | உச | உசஉசா |

### சனிகணிதம்.

புகல்சனிசண்டைமூதூர் நெற்கோட்டத்திந்துபோக்கிச்
சிகைசெய்திராறுமுப்ப தறுபத்தாற்பெருக்கிச்சேர்ந்த
வகையைமுன்னதற்கீய்ந்தோரை முதல்வைத்துமண்டலார்த்தம்
பகிர்ந்தெண்வண்டென்றேற்றி பொலிகாற்கீய்பலமுன்பாச்சே.

இ-ள். சனியை யெண்ணும்படி கண்டத்தைவைத்து மூதூர் நெற்கோட்டமென்ற கஅசாசா-க்கு ஈந்து பெற்ற பலமண்டலார்த்தம் அவைவேறுவை சேடம் கஉ ஙக சா0-ல் பெருக்கி முன்பில்கருவியா லீந்துப்பெற்றபலம் ராசி பாகை கலையாக வைத்துச் சேடம் அர்த்தாதிக்கமாகி லொன்றுகூட்டி மண்டலார்த்தத்தைப் பெண்வண்டு என்கிற ருகஎ-க்குப் பொலிகாலென்ற உங0-க்கு ஈந்து பெற்ற பலம் முன்புவைத்து இராசி பாகை கலையில் கலையுடன் கூட்டுவது.

நீலனுக்கத்தம்பூசம் புநர்தமுத்திரம்நீற்றேருணி
மாலையொண்குழலாய்நிது வாரசூன்னியம்வந்தாலே.

இ-ள். வெள்ளிக்கு பூசம் விசாகம் ரோகணி அவிட்டம் மிருகசீரிடம் அத்தம் அனுடம், சனிக்கு அத்தம் பூசம் புநர்பூசம் உத்திரம் ரேவதியும், இப்படி யிம்மூன்று விருத்தத்திலும் அவ்வாரங்களில்சொன்ன நட்சத்திசங்கள் வரில் வாரசூன்னியமென்றுபெயர், எ-று. (சுபகன்மங்களுக்கு விலக்கப்படும். 41

கிழமைபிறந்தநாள்.

வந்திக்குங்கதிர்க்குங்கங்குல் மதிக்குச்சித்திரைசெய்தாடி
புந்திக்குவிட்டமாகும் பொன்னுக்குக்கேட்டையாகும்
சந்திக்கும்புகர்பூராடஞ் சனிதோணிப்பிறந்தநாளாஞ்
சிந்திக்குங்கருமமெல்லாந் தீமையாய்விளையுமாதோ.

இ-ள். ஞாயிறு பரணி, திங்கள் சித்திரை செவ்வாய் உரோகணி புதன் அவிட்டம், வியாழம் கேட்டை, வெள்ளி பூராடம், சனி ரேவதி, இவை கிழமைபிறந்தநாள் எ-று. (சுபகன்மங்களுக்காகாது.) 42

மாதாந்தம்-வருஷாந்தம்-தோஷயோகம்.

மாதாந்தமூன்றுநாளும் வருஷாந்தமொருபத்தைந்து
நிதாந்தகிரணைத்தீண்டுந் தினமுன்பின்சேர்ந்தவேழுங்
காதாந்தகண்ணாய்நாளின் கடையிருகடிகைதானும்
வேதாந்தமுணர்ந்தோர்தீதென் றியம்பினார்மிகவுமென்மேல்.

இ-ள். மாதாந்தத்திலே யந்தம், ௩ நாளும், வருஷாந்தத்திலேயந்தம் ௧௫-நாளும், கிராணைத் தீண்டினநாளும் அதற்குமுன், ௩-நாளும் பின் ௩-நாளும் ஆக எழுநாளும் நட்சத்திரத்தில் அந்தம் (௨) நாழிகையும், சுபகன் மங்களுக்கு விலக்கப்படும் எ-று. 43

கண்ணுள்ளநாள்-இல்லாதநாள்.

மேதகுகதிரோனின்ற நாளுமற்றதினமேல்மூன்றும்
கோதறுபின்னில்மூன்றுங் குருட்டுநாளென்றுகொள்க
ஓதியவதற்குப்பின்முன் னாலதுவொருகண்காணும்
ஏதமில்நின்றநாட்க ளிருகணுண்டருக்கற்கென்னே.

இ-ள். ஆதித்தனின்றநாளும் அதற்குமுன் மூன்றுநாளும் பின்மூன்று நாளும் குருட்டுநாளென்க அதற்குமுன்னே நான்குநாளும் பின்னேநான்கு நாளும் ஒருகண்ணென்க அல்லாதநாட்களிரண்டு கண்ணுமுண்டு, எ-று.

அருக்கனார்கிழமையாதி சென்றவக்கிழமையாய்ந்து
பெருக்கிஞென்கதனாற்பெற்றை மாமுதற்கழித்துப்பின்னை
இருக்குநாளொன்பானோர்கண் பன்னிரண்டிருகண்காணும்
தருக்கிலாப்பின்னியேழுங் குருட்டுநாட்சத்திரற்கே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமை முதலாகச்சென்ற கிழமையை நான்கினிற் பெருக்கி அத்தொகையை அசுபதிமுதலாகக்கழித்து நின்றநாளிலே ஒன்பதுநாளொருகண், நின்றநாளிற் பன்னிரண்டுநாளிருகண் அதற்குமேல் எழுநாள் குருட்டுநாள், எ-று. 15

சந்தித்தபிற்பக்கத்துத் தசமிவிட்டதன்பின்னைத்து
முந்தூற்றதாதிநாளுங் குருடுபின்பொருமூன்றோர்கண்
பிந்தூற்றவாறுங்காணுக் பின்னின்மூன்றொருகண்காணுஞ்
சிந்தித்தவாறுங்காணுந் திரியமூன்றிருகண்காணே.

இ-ள். அமரபக்ஷத்து ஏகாதசி முதலைந்தும், பூர்வபக்ஷத்து பிரதமை முதல் நாலுங்குருடு, பஞ்சமிமுதல் மூன்றுமொருகண், அஷ்டமி முதலாறு மிரண்டுகண், பதினான்குமுவாவும் அமரபட்சத்துப் பிரதமையும் ஒருகண், விதியை முதலாறு மிரண்டுகண், அஷ்டமிமுதல் மூன்றுமொருகண், எ-று.

ஒருகணுண்டெனுந்திங்கட்கு வுத்தமமருக்கற்காக
விருகணுண்டாம்நாள்பக்க மியாவற்குமின்பமெய்தி
இருகணுமிலாநாளாகி லியற்றியகருமத்திதாய்
விரவியசுற்றத்தோடுங் கெடுமெனவிளம்பினாரே.

இ-ள். சந்திரதிருட்டி யொருதிருஷ்டியாகிலும் நன்றென்பது சூரிய திருஷ்டி யொரு திருஷ்டியாகிலுந் தீதென்பது, இரண்டுகண்ணுமுள்ள நாட்பக்கங்களு முத்தமம், எ-று

இராவிழிவிராசி-பகல்விழிவிராசி.

விளங்கியமேடங்குன்றை விடைமான்கடகம்வில்லு
மிளம்பிறையினமாயாறு மிரவுகண்காணுமென்னுந்
தெளிந்திடுமறிகோல்கன்னி குடங்கயல்தேளுமெல்லாம்
விளங்கதிரருக்கன்கூறாய்ப் பகல்விழியுடையமன்றே.

இ-ள். மேடமுதல் நான்கும் தனுசுமுதலிரண்டில் சந்திரனினமென் றும் இராவிழிக்குமென்றுஞ் சொல்லது சிங்கமுதல் நாலுராசியும் கும்ப முதலிரண்டு ராசியும் ஆதித்தனினமென்றும் பகல் விழிக்குமென்றும் சொல்லவதென்றவாறு. 18

பக்கமுன்னுந்திசாதிசை.

மன்னுமுதற்சதுர்த்தியினி லஞ்சாஞ்சாம
 மருவியவட்டமிரண்டுபன்னொன்றேழா
மூன்னிலுவாவானோர்சாமம்பிற்பக்கத்தில்
 மூன்றிலிருமூன்றேழில்மூன்றுஞ்சாமம்
பன்னியபிற்றசமியினிலெட்டாஞ்சாமம்
 பதினான்கின்முதற்சாமம்பகர்ந்தவீட்டில்
இன்னதனையஞ்சாமமென்றறிந்துமற்ற
 திரவிமுதலத்திசைதென்னலாமே.

இ-ள். பூர்வபக்ஷத்து சவுத்தியில் (ரு)ம் சாமம் மேற்கேயுன்னும் அஷ்டமி (உ)ம் சாமம் தென்கிழக்கேயுன்னும், ஏகாதசியில் எ-ம், சாமம் வடக்கேயுன்னும், பௌரணையில் (ச)ம் சாமம் தென்மேற்கேயுன்னும், அமாபக்ஷத்து திரிதிகை (௬)ம் சாமம் வடமேற்கேயுன்னும், சத்தமியில் (௩)ம் சாமம் தெற்கேயுன்னும் தசமியில் (அ)ம் சாமம் வடகிழக்கேயுன்னும், சதுர்த்தசி (க)ம் சாமம் கிழக்கே யுன்னும், இந்தச்சாமங்கள் சுபகாரியங்களுக்கும், இத்திசையில் யாத்திரைக்கும், விலக்கப்பட்டன. 49

நட்சத்திர விஷகடிகை.

ஆதிரைமூவேழ்கடிகைபுரட்டையிரெட்
 டத்தமிருபத்திரண்டுத்தரஞ்சதையமூவார்
தூதுவசவ்மகம்புநர்தம் ரோணியாரைந்து
 சோதிமுறம்கேட்டைமான்றலையுமீரேழ்
நீதிமன்னன்பரணிகுளமென்மூன்றிரலக்கைன்பான்
 னெடும்பணிக்கென்னான்குமைதார்நீவிமுடிக்கிருபான்
வீதியுருள்நாற்பதவிட் டப்பணைமால்பத்து
 வெண்குருகுவையைந்து மேல்விஷகடிகைநான்கே.

இ-ள். திருவாதிரை (உக) நாழிகைக்குமேல், பூரட்டாதி (க௬) க்குமேல், அத்தம் (உஉ)க்கு மேல், உத்திரம் சதையம் (க அ) க்குமேல் கார்த்திகை மகம் புநர்தம் ரேவதி (௩௰)க்குமேல், சுவாதி விசாகம் கேட்டை மிருகசீரிடம் (கச)க்குமேல் உத்திரட்டாதி பரணி பூராடம் (உச)க்குமேல், அசுவனி (ரு௰)க்குமேல் ஆயிலியம் (௩உ)க்குமேல், பூரம் பூசம் சித்திரை உத்திராடம் (உ௰)க்கு

மேல், ரோகணி (சய)க்குமேல், அவிட்டம் அனுஷம் திருவோணம் (ய)க்குமேல் மூலம் (உரு)க்குமேல் நாலுநாழிகை விஷநாழிகை இவை சுபகருமங்களுக்கு விலக்கப்பட்டன, எ-று. 50

தூமாதிபஞ்சகிரகம்.

கடுங்கதிரோன்சென்றதின் கட்டியதியதின்மேலே
கருதியநாலிராசி பதின்மூன்றுபாகை
யுடன்பெய்கிற்கண்டநாட்டூமத்தை
யோங்கியமண்டலத்தி லொழித்துதவிபாதம்
மடந்தையதிலாரோரை கூட்டவட்டம்
வட்டத்தைமண்டலத்திற் கனோவவில்லாம்
படர்ந்தசிலையிற்பதினேழுபாகையிடக்கேது
பண்டையதாமிராசியொன்றைப்பயில்வித்தாலே.

இ-ள். சென்றபாதமும் தியதியையும் வைத்து இதின்மேல் நாலிராசியும் பதின்மூன்று பாகையுங்கூட்டி நாளைப்பார்த்து கண்டநாளிலே தூமமென்று பெயராம் இந்தத் தூமத்தை மண்டலத்திற்கழிந்து கண்டநாள் விதிபாதமென்று பெயராம் அதின்மேல் ஆறிராசி கூட்டப்பரிவேஷம் இதை மண்டலத்திற் கழியகண்டநாள் இந்திரதனுசு இதிலேபதினேழுபாகைகூட்டக்கேது இதிலே ஒருராசிகூட்ட முன்போலேயாம். இந்நாட்கள் சுபகருமங்களுக்கு விலக்கப்பட்டன, எ-று. 51

கரணத்திவிபரம்.

வித்தகத்தாற்சென்றபக்கமிரட்டித்தொன்றை
விலக்கினின்றதொகையேழிற்கழித்தசேட
மத்தகையமடங்கடலற்புலியேனக்கழுதை
யானையெருதுடன்கோழி யிவையடைவேயறிந்தா
லுய்த்தனவேகரணம்பன் ஞன்குமுன்பின்
முதற்றியதிமுன்கூகை நாய்பாம்புமுதலாய்
எய்த்தபுழுவுவாய்ச்சூழ்ந்தகரணம்பொல்லா
வேலங்குக்குடன்கழுதையிவையுந்தீதே.

இ-ள். சென்றபக்கத்தை இரட்டித்து அதிலொன்றைக்கழித்து நின்றதொகையை ஏழிற்கழித்தால் நின்றசேடம் க-சிங்கம்(உ) புலி (ங) வராகம் (ச) கழுதை (ரு (யானை (சா) எருது (எ) கோழி யென ஏழுமறிந்து இவையிற்றில் பன்றியுங்கோழியும் கழுதையும்

சுபகன்மங்களுக்கு விலக்கப்பட்டன ரிஷபம் கோழிவிலக்கலாகாது அமரபட்சத்துச் சதுர்த்தசியிற் பிற்கூறு கூகை அமாவாசை மூற்கூறு நாற்பிற்கூறு பாம்பு பூர்வபட்சத்துப் பிரதமையில் முற்கூறு புழு இவை யுவாச்சூழ்ந்த கரணம் என்று பெயராம் இவை விலக்கப்பட்ட கரணம் எ-று. 52

தீதில்கதிர்நின்ற நான்கேழுற்பாதஞ்
சிறந்தபத்தாற் கம்பம்பதினைந்தாகிற்
கோதிலயன்கண்டமிருபத் தொருநாட்காலன்
கொடிதாகுமிவைசாலக் கொடுமைசெய்யும்
ஓதியசேய்நின்ற நாட்கேழுற்பாத
மோங்கியபத்தேற்றிகழ் பதினைந்தாகிற்
காதியிடுகாண்டபொழு மூன்றுநாளேற்
காலனிவைநல்வினைக்கு கழித்தார்நூலோர்.

இ-ள். ஆதித்தனின்றநாட்கேழாநாள் உற்பாதம் (கஉ)ம்நாள் கம்பம் (கரு) ம் நாள் அதிகண்டம் (உக) ம் நாள் காலன் செவ்வாய் நின்ற நாளுக் கேழாநாள் உற்பாதம் (ய) ம் நாள் திரிகி (கரு) ம் நாள் காண்டம் (உக) ம் நாள் காலன் இவையாகாது.

நூலறியும்புதனின்றநாளுக்கெட்டும்
நோக்கயிருபதிறனும்பதினெட்டுங்கண்டங்
கோலநெடும்புகற்கென்பானேழுங்குற்றங்
குருவுக்குமொன்பானேழ்கொடியதாகும்
நீலனுக்குபதினொன்றுமஞ்சுபத்தும்
நிகழ்ந்தவிருபதுமாறும்பந்ததேசமென்க
பாலனையமொழிமடவாய் பாம்புக்கேழ்நாட்
பரிகமிங்கிவையனைத்தும் பழித்தார்மேலோர்.

இ-ள். புதனின்ற நாளுக்கு உஅஉசஅ-ம் கண்டமென்க. வியாழம் நின்றநாளுக்கு கூ-எ-ம், வெள்ளிநின்றநாளுக்கு கூ-எ-ம் குற்றம், சனிநின்றநாளுக்கு கக-ரு-உய-கூ-ம் பந்ததேசமென்க, பாம்பு நின்றநாளுக்கு எ-ம், நாட்பரிகமென்று பெயராம். இவையெல்லாஞ் சுபகன்மங்களுக்கு விலக்கப்பட்டன, எ-று. 54

லத்தை இராசிவிஷம்.

மேஷிரவிநின்றதினத் தீராசையுதைக்கும்
வியாழமிருமூன்றுசேய் மூன்றுசனியெட்டாம்

மாலைவன்பின்னிருமூன்று மதியிருபத்திரண்டு
வாளரவெட்டெட்டுத்து புகர்பின்னொருதைப்பர்
சாலவின்னுனிக்கொடியர் மேடங்குன்னை
தனுக்கன்னிதலையாவ மரியாழ்கும்பங்
கோலினிடைகழுகுண்ணுங் குளிர்மீன்தேள்மான்
கொடும்பன்றிகடையிலுண்ணுமிவையுமறக்கொடிதேர்.

இ-ள். ஆதித்தனின்றநாளுக்கு கஉ-ம் நாளை புதைக்கும், இப்படிக்கு வியாழம் கூ-ம் நாளும், செவ்வாய் ரு-ம் நாளும், சனி அ-ம் நாளும், புதன் பின் கூ-ம் நாளும், திங்கள் பின் உஉ-ம் நாளும், பாம்புபின் அ-ம் நாளும், வெள்ளி பின் ௬-ம் நாளும், உதைக்கும், இந்நாட்கள் சுபகாரியத்துக் காகாதென்பது, மேஷம் ரிஷபம் தனுசு கன்னி இவை முற்கூறுவிஷம், பாம்பு உண்ணும், சிம்பம் மிதுனம் கும்பம் துலாம் இவை நடுக்கூறு கழுகுண்ணும் கடகம் மீனம் விருச்சிகம் மகரம் இது கடைக்கூறு பன்றியுண்ணும் இவை யாதொரு காரியத்துக்கு மாகாது. 55

குளிகைபவுறுதிகள்.

கொடுங்குழையாய்தங்கிழமைதாங்கள்முதலாகக்
குறித்தொருவன்கிழமையினைக்கோட்களேழு
மடங்கவுண்ணுமைமுக்காக்கடிகைதன்னி
லாதத்திலுண்காலனைதயமாகும்
நெடுங்குருவூணியமகண்டன்புந்தியத்தன்
நீலனுண்குளியனிவைவினைக்கலாகாக்
கருங்குளியனுமேறத்தனையேறல்
கால்நாட்டல்நெல்லிடுதல்கருமமாமே.

இ-ள். தந்தாங்கிழமை தந்தான்முதல் பகல்நாழிகையை ஏழு கோளுமடைவே மூன்றேமுக்கால் நாழிகை ஒருவுறைகவுண்பார்கள் இவையிற்றில் ஞாயிறு நாண்காலனைதயமென்றுபெயர் வியாழத்தினாணியமகண்டம் புதனுான் அர்த்தபிரகாரன் சனியினான் குளியன் இவை சுபகன்மங்களுக்கு விலக்கப்பட்டன குளியனில் அகமெடுக்க ஊரேற்ற வாகனமேற கம்பம் நாட்ட தானியமிட்டு வைக்கவும் நன்றென்றவாறு. 56

யோகினி.

கருதுமுதற்பக்கமுடன்நவமிகிழக்காகுங்
களிப்புடையபதினொன்றுமூன்றுக்கெதன்கிழக்காங்

தெரியிலொருபதின்மூன்றுமைமர்துர்தெற்காஞ்
செப்பரியபன்னிரண்டும்நான்குந்தென்மேற்கு
மருவுபதினொன்காறுமேற்குவாவேழ்
வடமேற்காந்தசமியுடனிரண்டும்வடக்காகு
மூரியவிருநான்குவடகிழக்கேயுண்ணும்
யோகினிமுன்னிடந்தியமெறிந்ததிசைநன்றே.

இ-ள். பிரதமையும் நவமியும் கிழக்கேயுண்ணும், ஏகாதசியும் திரிதிகையயும் தென்கிழக்கு, திரயோதசியும் பஞ்சமியும் தெற்கு, துவாதசியுஞ் சதுர்த்தியும் தென்மேற்கு, சதுர்த்தசியும் சஷ்டியும் மேற்கு, பூரணையுஞ் சத்தமியும் வடமேற்கு, தசமியும் விதியையும் வடக்கு, அஷ்ட வடகிழக்கேநிற்கும், இப்படிவரப்பட்ட யோகினி முன்னுமிடமுந்தீதாம் பின்னும் வலமும் நன்று, எ-று. 57

ஆகாசபாதாள சுக்கிரன்.

நன்றானதிசையெட்டுமுதற்பக்கங்கிழக்காம்
நாலிரண்டுதிசைநவமிவிண்ணிலுண்ணுஞ்
சென்றாரும்பூதலத்திற்தசமியுண்ணுஞ்
திரியவுமிவ்வகைமுப்பான்றியின்கேரு
மென்றாருந்தென்கிழக்கு நிலம்விண்ணுந்தீதா
மெதிருமிடமும்வழியி லெவரும்போகார்
மின்றாருமருங்குழலாய் வலமும்பின்னு
மிகனல்லன்சுக்கிரனல்வினைகட்கெல்லாம்.

இ-ள். கிழக்கு முதலாயெட்டுதிக்கிலும் பிரதமை முதலாக, யெட்டு நிற்கும் நவமி ஆகாசத்திலும் தசமிபூமியிலும் நிற்கும், ஏகாதசி முதலாக அமரபட்சத்து பஞ்சமி யறுதியாக முன்புபோல் நிற்கும், சஷ்டி முதலாகவமாவாசையறுதியாக முன்போல் நிற்கும் இப்படி முப்பது திதியும் நிறுத்துவது, இவை யீற்றில் தென்கிழக்கு நிற்கும், பக்கங்களு மெதிருமிடமும் யாத்திரை முதலானவைக்கு விலக்கப்பட்டன, அல்லாதபக்கங்களும் வலமும் பின்னும் சுக்கிரன் மிகவும் நல்லன், எ-று. 58

நந்தை-பத்திரை-சயை-ரித்தை-பூரணை.

வினவின்முதற்றிதியாறுபதினொன்றுநந்தை
மேலிரண்டேழ்பன்னிரண்டும் விளங்கியபத்திரையா

மினியவொருமூன்றெட்டிப் பதின்மூவுஞ்சயையா
மிருத்தையென்பர் நான்கினுடன் நவமிபதினான்கை
புனைகுழலாய்ப்பஞ்சமியும் பத்துமூவாத்தாறும்
பூரணையென்மறியலவன் கோல்மகரஞ்சரமாக்
தனிவிடைதேள்குடஞ் சிங்கந்திர இராசிதாறு
தனிமிதுனங்கன்னி மீனுபயமெனத்தருமே.

இ-ள். பிரதமை சஷ்டியும் ஏகாதசியும் நந்தை யென்றறிக, விதியை சத்தமி துவாதசி பத்திரை யென்றறிக. திரிதிகை அஷ்டமி திரயோதசியும் சயைதிதி யென்றறிக, சவுத்தி நவமி சதுர்த்தசி இருத்தையென்றறிக, பஞ்சமி தசமி உவாவும் பூரணையென்றறிவது, மேஷம் கற்கடகம் துலாம் மகரம் இவை சரராசி, ரிஷபம் சிங்கம் விருச்சிகம் கும்பம் இவை ஸ்திரராசி, மிதுனம் கன்னி தனுசு மீனம் இவை உபயராசி-எ-று. 59

சந்திரநாட் கூறுபாடாகிய திதிப்புணர்ச்சி சக்கரம்.

| சந்திரன் கூறு | க-பக்கம் நந்தை | உ-ம் பக்கம் பத்திரை | ங-ம் பக்கம் சயை | ச-ம் பக்கம் இருத்தை | ரு-ம்பக்கம் பூரணை |
| --- | --- | --- | --- | --- | --- |
| முதல் வட்டம் | பிரதமை * | விதியை * | திரிதிகை * | சதுர்த்தி * | பஞ்சமி * |
| உ-ம் வட்டம் | சஷ்டி * | சத்தமி * | அஷ்டமி * | நவமி * | தசமி * |
| ங-ம் வட்டம் | ஏகாதசி * | துவாதசி * | திரயோதசி * | சதுர்த்தசி * | உவாஅமா * |

திரிவித இராசிச் சதுஷ்டியமாகிய இராசிப்
புணர்ச்சிச் சக்கரம்

| சரராசிகள். | ஸ்திரராசிகள். | உபயராசிகள். |
| --- | --- | --- |
| மேஷம் | இடபம் | மிதுனம் |
| கர்க்கடகம் | சிங்கம் | கன்னி |
| துலாம் | விருச்சிகம் | தனுசு |
| மகரம் | கும்பம் | மீனம் |

பஞ்சாங்க பலன்.

தகுமிரவிசனிசெவ்வாய் பாம்புதிக்கோள்
சந்திரனும்பின் ரியயன் மூன்புநல்லன்

மிகுமறையோன்புதன் வெள்ளிநற்கோளெல்லா
மிகநல்லருச்சமிரா வாரபயனில்லைத்
தொகுதிதியுங்குணமொன்று கரணமிரண்டாகுந்
துய்யநாலொருநான்கு கிழமையெட்டாம்
முகிழ்முலையாயோகபலன் பதினாறென்பர்
முகுர்த்தபலன் அளவில்லை மொழியின்மாலே.

இ-ள். ஆதித்தன் சனி செவ்வாய் பாம்பு தீக்கோளென்றும், சந்திரன் அமரபக்ஷத்துத்தீயன் பூர்வபட்சத்துநல்லன் வியாழம் வெள்ளி புதன் நற்கோளென்றும் எல்லாருந் தந்தாம் உச்சஸ்தானங்களில் நல்லரென்க, இராவைக்கு வாரபலன் இல்லையென்க. பக்ஷத்தின் பலமொன்று, கரணத்தின் பலமிரண்டு, நாளின் பலம் நாலு, வாரபலன் யெட்டு யோகபலம் பதினாறு, முகூர்த்தபலன் அளவில்லை. 60

## நோக்கு பலன்.

மாலவன்றனுதையமாயிரங் குற்றங்கெடுக்கும்
வண்புகரோனவன்பதினாயிரங் குற்றமாய்க்குஞ்
சீலமறையவனூறாயிரங் குற்றந்தீர்க்குஞ்
சித்தசிவயோகம்நூறு நூறாயிரங்குற்றஞ்செறுக்குஞ்
சோலையிளங்குயிலனையா யமுதயோகந்
தோன்றியிடத்தீமையெல்லாந் துரப்புண்டோடுங்
கோலவிளங்கதிர்கண்ட விருள்போற்றேயுங்
குருவெள்ளிபுதனோக்கிற் குற்றமெல்லாம்.

இ-ள். புதன் ஆயிரங் குற்றந்தீர்க்கும் வெள்ளி பதினாயிரங் குற்றந் தீர்க்கும் வியாழமுதயம் நூறாயிரங் குற்றந்தீர்க்கும் அமிர்தயோகம் எல்லாக்குற்றமுந் தீர்க்கும் புதன் வெள்ளி வியாழம் நோக்குண்டாகில் ஆதித்தனைக்கண்ட விருள்போல் எல்லாக் குற்றமும் நீங்கும், எ-று. 61

## கிரகவுறவும் - பகையும்.

எல்லிரவிதனக்குறவு வியாழந்திங்கட்
கிரவியனும்புதனுஞ்சேய்க் கினியபுதன்வெள்ளி
புல்லிலெழும்புதற்கருக்க னொழியநல்லர்
பொன்னவற்குச்சேயொழியப் பொருந்தாரில்லை

கலைபுகற்குறவுசனி செவ்வாய்புந்தி
நான்மறையோன்சனிக்குறவு புதன்பொன்வெள்ளி
யல்லவர்களெல்லாரும் பகைவரென்று
ராரணங்கேயருந்தமிழ்நூ லுடையவாய்ந்தோர்.

இ-ள். ஆதித்தனுக்குறவு வியாழம் சந்திரனுக்குறவு வியாழமும் புதனும், செவ்வாய்க்குறவு புதனும் வெள்ளியும், புதனுக்கு ஆதித்தனொழிய மற்றவருறவு, வியாழத்திற்குச் செவ்வாயொழிய மற்றவருறவு, வெள்ளிக்குறவு சனி செவ்வாய் புதன் வியாழம் சனிக்குறவு புதன் பொன் வெள்ளி, எ-று. 62

ஆட்சி - உச்சம் - நீசம்.

ஆய்ந்தகதிர்க்காக்ஷிசிங்க மதிற்கலைஞன்செவ்வாய்க்
காடுதேள்புதற்கரிவை மிதுனம்பொன்னவற்கு
வாய்ந்தசிலைமீன்புகற்குந் துலையிடபஞ்சனிக்கு
மகரம்கும்பமிவையாட்டி வாளிரவிக்காடு
யேந்தமதிக்கேறிக்குக் கலைபுதற்குமீனம்
யிரணியற்குக்கடகமெழில் புதற்குக்கன்னி
காய்ந்தசனிக்குத்துலையு மாவுதேளுச்சங்
கனங்குடையாயேழிடங்கள் நீசமெனக்கருதே.

இ-ள். ஆதித்தனுக்காட்சி சிங்கம், சந்திரனுக்குக் கற்கடகம், செவ்வாய்க்கு மேஷம் விருச்சிகம், புதனுக்கு கன்னி மிதுனம், வியாழத்திற்குத் தனுசு மீனம் வெள்ளிக்கு ரிஷபம் துலாம், சனிக்கு மகரம்கும்பம் இவை யாட்சியென்றறிக, ஆதித்தனுக் குச்சம் மேஷம் சந்திரனுக்குச்சம் ரிஷபம் செவ்வாய்க் குச்சம் மகரம் புதனுக் குச்சம் கன்னி வியாழத்துக்குச்சம் கடகம் வெள்ளிக்குச்சம் மீனம் சனிக்குச்சம் துலாம் பாம்புக்குச்சம் விருச்சிகமென்றறிவது உச்சத்து யேழாமிராசிநீசம். 63

ஆற்கம்பம் - கிரகவலி.

கருத்துடையவொன்றுநான்கேழுபத்தாங்
கண்டங்களுதையநீர்பாடுச்சமென்பார்
பொருத்துடையபுதன்வியாழமுறைநயத்துவலியர்
புகர்மதிநீர்பாம்புசனிபாட்டிற்பூமன்
தெரித்தகதிருச்சியிளில்வலியர்புதனுனக்குச்
சேய்வலிதுசேய்க்குமந்தன்மதற்குச்செம்பொன்

குருந்தனுக்குப்புகர்புகர்க்குமதிமதிக்குக்கதிரோன்
கொடுங்கதிரோன்றனக்காவுகோல்வளையாய்வலிதே.

இ-ள். (க) (ச) (எ) (ய) ம் இவைகளுதையமென்றும், நிர்க்கீழென்றும் பாடென்றும் இச்சமென்றும் நாலுகண்டத்தின் பெயராம் இவற்றில் புதன் வியாழம் உதையத்துவலியர் வெள்ளி சந்திரன் நீர்க்கீழ்வலியர், சனி பாம்புபாட்டில்வலியர் செவ்வா யாதித்தன் உச்சியில் வலியரென்றறிவது புதனுக்கு செவ்வாய் வலிது செவ்வாய்க்கு சனிவலிது சனிக்கு வியாழம்வலிது வியாழத்துக்கு வெள்ளிவலிது வெள்ளிக்குச் சந்திரன்வலிது சந்திரனுக்கு ஆதித்தன்வலிது ஆதித்தனுக்குப் பாம்புவலிது, எ-று. 64

அவச்சாயை பதச்சாயை.

வலியதகராவணியொன்றிருநாற்சுன்னிடம்
மங்கைமுதற்சுன்னிருகாலொன்றுயாழ்கொலொன்று
மூனவில்லிருமுக்காலேலாரிரண்டலவன்மீன
மோரிரண்டுமொன்றரையுமொன்றுந்தேனிரண்டும்
பொலியுமிரண்டரையுமூன்றுவில்லுமூன்றும்
பொருந்தியமூன்றரைநான்குபுல்வாய்நான்கும்
பலன்கனிமூன்றரைமூன்றுங்குடமூன்றுமிரண்டரையும்
பயிரண்டுங்கழியவச்சாயைபதச்சாயையரையே.

இ-ள். சித்திரை ஆவணிமுதல் பக்கத்து (க) நடுப்பத்து (உ) பிற்பக்கத்துக்குச்சுன் வைகாசி புரட்டாசி முதற்பக்கத்து சுன் நடுப்பத்து (உ) பிற்பத்துக்கு (க) ஆனி ஐப்பசிமுதற்பத்து (க) நடுப்பத்து (கஉ) பிற்பத்தும் உ-ஆடிபங்குனி முற்பத்து உ-நடுப்பத்து கஉ-பிற்பத்து-கார்த்திகை முற்பத்து-உ-நடுப்பத்து-உ௩-பிற்பத்து-௩- மார்கழிமுற்பத்து -௩-நடுப்பத்து - ௩உ-கடைப்பத்து-ச-தை முற்பத்து-ச-நடுப்பத்து-௩உ-பிற்பத்து-௩-மாசிமுற்பத்து-௩-நடுப்பத்து-உஉ-பிற்பத்து-உ-இப்படி யவச்சாயைகழியும் பதச்சாயையெப்பொழுதும் அரையடி கழியும்-எ-று. 65

அகசுபிரமாணம்.

அரிமகரங்கேள்மிதுனமெஞ்சேகாலா
மாடுகயல்நாலேகாலரிவைதுலையஞ்சா
மெருதுகுடம்நாலேமுக்கால்வில்லவ
னிருநாழிகையஞ்சரையூணிராசிகள்பன்னிரண்டும்

விரவியசித்திரைமுதற்பங்குனியீராக
மேடமுதல்மீனந்தம்வெய்யோனாளும்
பருதியில்லையோரையறிந்தாரோருரைக்கு
பண்டுரைத்தநாழிகையாற்பகற்கடிகைபகரே.

இ-ள். சிங்கம் விருச்சிகம் மகரம் மிதுனம் நாழிகை ருவ-மீனம் மேஷம் சவ-துலாம் கன்னி ரு-ரிஷபம் கும்பம் சஅ-தனுசு கடகம் ருஉ-இப்படி பன்னிரண்டுராசியுமிந்தயவையுங்கண்டு கொள்வது எ-று. 66

பகல்நாழிகை.

பகர்ந்தபகல்நாழிகையைப்பாதிசெய்து
பாதிதனையெழிலாற்பெருக்கிப்பாதில்
திகழ்ந்தவடியனந்தவச்சாயைப்பாதச்சாயை
நீக்கிநிறைவடிமேலேவேழுங்கூட்டித்
திகழ்ந்தமுதற்றொகையதனுக்கீதனையீய்ந்து
சிறந்தபலஞ்சென்றநாழிகையின்பின்பேர்
புகழ்ந்திரவிபடுங்கடிகையினைதாமென்று
பொலன்குழையாய்பகற்கடிகைபொருந்தச்சொல்லே.

இ-ள். முன்புசொன்ன பகல்நாழிகை இரு கூறாக்கி ஒரு கூறினை யேழிற்பெருக்கி அடியளந்தவச்சாயைபாதச்சாயை நீக்கி நின்றவடிமேல் எழுங்கூட்டி யதனைமுற்பட்ட தொகையைக்கீய்ந்த பலன் சென்றநாழிகையாம் உச்சிக்குப்பின் ஈய்ந்த பலனஞ்சுமிக்கும் நாழிகை, எ-று. 67

இராத்திரி நாழிகை.

சொல்லுமுதநாட்பின் பொன்னிரண்டேமுக்கால்
தொழுமாரமலிருமுக்காமும் மூக்கால்ரோணி
புல்லியமானிரண்டரைய திரையொன்றேமுக்கால்
புநர்பூசமுன்றேமுக்காற் பூசமிரண்டேகால்
வல்லயணிலொன்றேமுக்கால் மகமிரண்டேகாலாம்
மாபூரமுத்திரமோ ரிரண்டாங்கைமீன்
சொல்லுமொருமூன்றேகால் சித்திரையொன்றரையாக்
தீபமொன்றேமுக்கால் முறமிரண்டேகாலே.

இ-ள். பரணி உஞ கார்த்திகை சரு ரோகணி உவ மிருகசீரிடம் உ0 திருவாதிரை கஞ புநர்பூசம் சஞ பூசம் உவ ஆயிலியம் கஞ

மகம் உவ பூரம் உ உத்திரம் ௨ அஸ்தம் ௩வ சித்திரை கஉ சோதி கஞ-விசாகம்-உவ, எ-று. 68

காற்பனையொன்றேமுக்கா லவ்வளவேகேட்டை
கருதியமூலம்பொய்கை யிரண்டேகாலாடி
யேற்குமிரண்டறை யோணமூன்றேகாலவிட்ட
மிரண்டுசெக்கொன்றேமுக்கால் மும்முக்கால்புரட்டை
தாற்றியவுத்திரட்டாதி யிரண்டேமுக்கால்
மரக்கலமிரண்டேகால் மாவொன்றேமுக்கால்
சீர்த்தவத்திதனிலுச்சம் நாளையிஞ்ஞன்றறிந்து
சேயிழையாயதுமுதலாய்ச் செல்கடிகைசெப்பே.

இ-ள். அனுடம்-கஉ-கேட்டை-கஉ-மூலம்-உவ-பூராடம்-உவ-உத்திராடம்-உ௨-திருவோணம் - ௩வ - அவிட்டம்-உ-சதையம்-கஉ-பூரட்டாதி-உவ-உத்திரட்டாதி-உஉ-ரேவதி-உவ-அசுவனி-கஉ-இப்படி தாட்குமென்று சொல்வது, எ-று. 69

லக்கின அங்குசம்.

செப்பியசெல்காற் கடிகைபெருக்கியாறில்
திதிபெய்துகதிர்நின்ற வோரைமுதலாக
முப்பதிஞற்கழித்துநின்ற வோரைமூன்றே
யாறுமாவரைப்பாகை முறைமுறையேயுண்ப
ரைப்பசியிற்சேய்வெள்ளி புந்திதிங்க
ளடுப்பருக்கன் புதன்வெள்ளி யழலோரை
யொப்பரியபொன்காரி சனிபொன்னுண்ணு
மொழிந்தவையுமிவ்வகையே யுண்பரெனவுரையே.

இ-ள். சென்றநாழிகையை கூ-ல் பெருக்கி அன்றைத் திதியையும் அதனுடன் கூட்டி ஆதித்த நின்ற ராசிமுதலாக வொரு ராசிக்கு முப்பதாகக் கழித்து நின்றது. உதைய ராசியாம், அவ்வுதைய ராசியிற் சென்ற பாகத்தை அறிந்து மூன்றேயாறு மாவரை பாகைக்கு ஒரு அங்கசமென்றறிவது, அசுவதி முதற்கால் செவ்வாய், உ-ம், கால் வெள்ளி,௩-ம், கால் புதன் ச-ம், கால் சந்திரன், பரணி முதற்கால் ஆதித்தன் உ-ம், கால் புதன் ௩-ம், கால் சுக்கிரன் ச-ம், கால் செவ்வாய் கார்த்திகை முதற்கால் வியாழம் உ-ம், கால் சனி ௩-ம், கால் சனி ச-ம், கால் வியாழம் இவ்வொழிந்த நாட்கள் இவ்வகையே யொட்டிக் கொள்வது-எ-று. 70

## திரேகாணம்-காலவோரை.

உரைத்திடிலோரிராசி யொருமூன்றுகூறும்
வோரையுடையவனுன்று முதலஞ்சாமோரை
கருத்துடையநடுவொன்பா ளுரைகாப்போன்
கடையுன்றுந்திரேகாண மிவைகாலவோரை
யருக்கன்முதற்சனியீறுங் கிழமையேழு
மந்தணன்முன்புதனீறு வுண்பான்முன்னே
சரித்தவிவற்கவ்வாறுய கோட்கள்வந்து
தக்கவிரண்டரைகடிகை யுண்பரெனச்சாற்றே.

இ-ள். ஒரு ருசியை மூனுகூறுக்கி யிராசியுடையவன் முதற்கூறுன்றும், ௫-ம், இராசியுடையவன் நடுவிற்கூறுன்றும் ௯-ம், இராசியுடையவன் கடைக்கூறுன்றும், இவ்வகையெல்லா ராசிகளுக்குந் திரேகாண மொட்டிக்கொள்வது, காலவோரை கோள்வரும்படி ஞாயிறுமுதல் சனியீராக எழுகிழமையும், வியாழமுதல் புதனீராக ௭-ம் அடைவே சிறுகால முதல்வந்து ௨½ - நாழிகையுன்றும் முதல் ௧, உண்டகோளுக்கு ௬-ம் கோள், பின்பு ௨½- நாழிகையுன்றும், இவ்வகையாய் யெல்லா கோட்களுந உண்பார்.

## திரிம்சாம்சை-அர்த்தவோரை.

சாற்றிடிலோரையொன்று பாகைமுப்பான்
சமனிரட்டையொற்றை வியனுத்தைதய்மி
லேற்றவைந்தொடைந்தேட் டேழைந்துகூறு
வொரிகாரியிரணியன்மால் புகருண்பர்வியனில்
மாற்றுசமந்தனில்வெள்ளி மால்பொன்காரி
மண்மகற்கோட்கூறுன்று வளக்கைநல்லார்
தோற்றுவியன்முதற்பாதிக் கதிர்பின்திங்கள்
சுடற்சிலவுசமயந்திங்கள் முதற்பின்சூழ்கதிரே.

இ-ள். ஒரு ராசியை முப்பது பாகம்பண்ணி ஒற்றித்த விராசியன் இரட்டித்தராசி சமன், இவற்றை ௫-ம், ௫-ம்- ௮-ம், எழாம், ௫-ம் ஆக முப்பது பாகையையும் ௫-கூறுக்கி இதில் வியனிராசியில் முற்கூறு செவ்வாய் ௨-ம், கூறுசனி ௩-ம், கூறு வியாழம ௪-ம், கூறும் புதன் ௫-கூறுவெள்ளி. ஆக இவ்வகையே யுண்பார், சமனிராசியில் வெள்ளி புதன் வியாழம் சனி செவ்வாய் என்றிவ் வடைவே

கோட்கூறுண்ணுமென்றறிவது சுடற் சிலவுகோ ளுண்ணும்படி யியனிராசியில் முதற்கூறு கரு-ம் பாகை ஆதித்தனுண்பிற் கூறுசந் திரனுண் சமனிராசியில் முற்கூறு சந்திரனுண், பிற்கூறு ஆதித்த னுண் இவ்வகைப் பார்த்துக்கொள்வது, எ-று. 72

முகூர்த்த விதானங்கள்.

கதியுடைபுணர்சீமந்தம் கருதிபேர்காதுநல்வாய்
முதுமையிற்கல்விமுந்நூல் முடிமணம்பொற்பூவிஞ்ஞன்
விதைமுதல்போக்குச்சாந்தி பதிட்டைவீடெத்தல்மேலும்
பொதுவியல்விதானமெலாம் புவல்செய்வன்பூசையென்னுய்

இ-ள். நிஷேகம் பும்சவனம் சீமந்தம் நாமகரணம் கரண வேதம் அன்னப்பிராசனம் சவுளம் வித்தியாரம்பம் உபனயனம் அபிஷேகம் விவாகம் கிருஷியாரம்பம் பீஜவாபனம் யாத்திரை சாந்தி பிரதிஷ்டை கிரஹாரம்பம் பொதுவியல் விதானங்களெல் லாஞ் சொல்லுவன், எ-று. 73

நிஷேகம்.

பூவையேயனையார்பூத்த நாள்முதல் மூன்றுநாளும்
மேவிடார்புணர்ச்சிபின்னை விரும்புநாட்பன்னிரண்டா
மேவியகருவதுண்டா மிங்கிதிலிரட்டைநாளான்
பாரியவொற்றைநாளேற் பெண்ணெனப்பகர்மினீயே.

இ-ள். ஸ்திரீ பூத்தநாள்முதல் மூன்றுநாளும் விலக்கப்பட் டன. மேற்பனிரெண்டுநாளுங் கெர்ப்பமுண்டாம் இதில் இரட்டித் தநாளெல்லாம் ஆண் ஒற்றை நாளெல்லாம் பெண், எ-று. 74

பகர்தருசோதிமூலம் பனையுருளோணந்தோணி
தகவிலுத்திரங்கள் மூன்றுஞ் சதையநாளத்தஞ்சாலப்
புதல்வர்கள்புணர்ச்சிவிட்டஞ் சித்திரைபுநர்தம்பூசம்
மகசிரங்குதிரையிந்நாள் மத்திமந்தீதுமற்றே.

இ-ள். சோதிமூலம் அனுஷம் ரோகணி திருவோணம் ரேவதி உத்திரங்கள் மூன்றும் சதையம் அத்தம் இவை நிஷேகத்துக்கு சுத்தயென்பது அவிட்டம் சித்திரை புநர்பூசம் பூசம் மிருகசீரிடம் அசுவனி அவை மத்திபம் அல்லாதவையாகாது, எ-று. 75

தீதுவாவெட்டிரித்தை தீயவர்வாரஞ்செப்பி
லோதருபிறந்தநாட்கள் பகலுடனொழிக்கப்பட்ட
தாதவிழ்குழலிகேளவம் சரராசிமிகவுநன்று
மேதகுநோக்கதேனுக்கில் மிகவும்விழுமிதாமே.

இ-ள். உவா அஷ்டமிரித்தை ஞாயிறு செவ்வாய் சனி ஜென்ம நக்ஷத்திரங்களும் பகலும் விலக்கப்பட்டன, அல்லாதவைகளுஞ் சரராசிகளுஞ் சராசிகளு முத்தமம் மற்ற ராசிகளுக்குஞ் சுபக்கிரக நோக்குண்டாகில் நலம், எ-று. 76

விழுமியமதிகெண்டங்கல் வெள்ளிபொனஞ்சோடென்பா
னெழுமிடம்நல்லர்புந்தி யயழிறேடொன்பாலனல்ல
னழிவுறுபாபர்பன்னொன் றுமொருமூன்றுநல்லர்
செழுமணிப்பூணினார்கள் புணர்ச்சியைச்செப்புங்காலே.

இ-ள். உதையம் ௪-மிடம் ௰-மிடம் சந்திரனல்லன், வெள்ளியும் வியாழமும் ௫-மிடம் ௬-மிடம் உதையத்திலும் நல்லர், புதன் ௭-மிடம் ௬-மிடம் நல்லன் பாபர் ௰௧-மிடம் ௬-மிடம் ௩-மிடம் நல்லர், எ-று. 77

புங்கவசனம்.

செப்பியதிங்கள்மூன்றில் திருவோணம்பூசஞ்சேர்ந்த
ஒப்பருசுற்கோள்வாரத் துதித்திடவெள்ளிதிங்கள்
வெப்புருவிருத்தைகன்னி வீணைநண்டெட்டிற்கோள்கள்
துப்புறுபரவாய்நீக்கித் துய்யபும்வசனஞ்சொல்லே.

இ-ள். மூன்றுமாதத்திற் பூர்வபட்சத்திலே திருவோணம் பூசம் இந்நாட்களில் சுபவாரங்களிலே வெள்ளி திங்கள் உதையமாக ரித்தைகன்னி மிதுனம் கடகம் நீக்கி அஷ்டமம் சுத்தியுண்டாகவும் ஆகாசநிர்மலமாகவுங் கொள்வது, எ-று. 78

சீமந்தம்.

சொல்லுநான்காறெட்டிங்கட் டோணிமான் றலைபாரோணம்
புல்லுமுத்திரங்களத்தப் பூசங்கள்புகட்கோள்வாரம்
நல்லவேனிரட்டைப்பக்க நவமியோடுவொத்தோள்சிங்க
மல்லவேசீமந்தத்துக் கட்டமசுத்தமாக்கே.

இ-ள் ௪-மாதம், ௬-மாதம், ௮-மாதத்திலேயாதல் பிரம ணராகில் மூன்றிலுஞ் சீமந்தம் பண்ணுவது இரட்டித்த பக்கங்க

ளும் நவமியுந்தீது தியவிராசிகளில் விருச்சிகம் சிங்கம் ஆகாது ஒழிந்தவையிற்றிலே சுபக்கிரக வாரத்திலும் ரேவதி மிருகசீரிடம் ரோகணி திருவோணம் உத்திரங்கள் மூன்று பூசங்கள் இவ்விருபக்கங்களும் இருத்தை நீக்கி அஷ்டமசுத்தமாகக் கொள்வது, எ-று. 79

ஆக்கியசீமந்தத்துக் கடைவாரந்திங்களெட்டிம்
மாக்கதிரோறுபோதின் மருவுமுற்பக்கத்தேதழி
ஓக்கியபன்னிரண்டி லிரோகணியோணராகில்
பூக்குழல்மடவால்மாயோன் பெலியிடப்புலவர்சொன்னார்

இ-ள். எட்டுமாதத்தி லேறும்பொழுது பூர்வபக்ஷத்திலே சத்தமி துவாதசியான பக்கங்களிலே ரோகணி திருவோணம் இந்த நாட்களிலே சுபக்கிரகங்கள் நோக்குண்டாக விஷ்ணு பெலியிடுவது, எ-று. 80

சூதகமனை புகுதல்.

புலந்திருவனையாய்கேளாய் பெருமனைபுகுநாளத்தஞ்
சிலம்பின்மான்றலைமாவோணஞ் சித்திரையுத்திரங்கள்
கலம்பனைபுணர்தஞ்சோதி காரியான்புகர்மால்திங்கள்
நலங்குடந்தேளிருத்தை யெட்டிற்கோள்தவிரநன்றே.

இ-ள். சூதகக் கிரகப்பிரவேசம் அத்தம் மிருகசீரிடம் அசுபதி திருவோணம் சித்திரை உத்திரங்கள் (௩) அனுடம் புனர்பூசம் சோதிசனி வெள்ளி புதன் திங்கள் இவை நல்லது கும்பவிருச்சிகம் இருத்தை இவை தவிர, அஷ்டமசுத்தியுண்டாக சுபக்கிரகங்கள் நோக்குண்டாகக் கொள்வது. 81

பிள்ளைப் பிறப்பு.

நன்றுநற்குழவிதோன்றும் பொழுதினில்நன்னீராடிக்
கன்றொடும்பசும்பொன்பூமி கலைபலமறையோர்க்கீய்ந்து
சென்றுமைந்தனையெடுத்து திருமுகங்கண்டுசெவ்வேள்
ஒன்றியசாதகங்க டோலையிலெழுதிவைப்பாம்.

இ-ள். பிள்ளை பிறந்தபோது பிதா ஸ்நானஞ்செய்து பிராமணருக்குப் பசுவுங் கன்றும் பொன்னும் பூமி முதலிய தானம்பண்ணி யப்புத்திரர் முகங்கண்டு சாதகமெழுதி வைப்பது நன்மை. 82

நாமகரணம்.

எழிற்பெயரிடுகொள்பத்தி லீராறிலோணத்தோணி
வழுத்துமான்றலைபார்மூல மகமத்தஞ்சதையம்விட்டம்
விழுப்பனையுத்திரங்கள் விளங்கிருபூசநன்றும்
வொழித்திடானுவாவைவொன்பா னொத்தித்தபக்கநுள்ளார்

இ-ள். பிராமணருக்குப் பன்னிரண்டாநாள் அல்லாதவர்களுக்கு முப்பதாநாள் நாமகரணம் பண்ணுவது திருவோணம் ரேவதி மிருகசீரிடம் ரோகணி மூலம் அத்தம் சதையம் அவிட்டம் அனுஷம் உத்திரங்கள் மூன்றும் சோதி புநர்பூசம் பூசம் இவையும் இரட்டித்த பக்கங்களும் நல்லது நவமியும் உவாவுமொழிய அல்லாதவைகள் நல்லது, எ-று. 83

உளவருநிலையிராசி வுதித்திடவுச்சிமுன்னே
எள்ளிருநம்பினற்கோள் வாரத்தெட்டினிக்கோள்நீக்க
வொள்ளியபகைநீச்சத்தை நோக்குங்கோளுதையமாற்றி
பிள்ளைதன்னுமஞ்சாற்றிப் பிறைநுதற்கருங்கட்பேதாய்.

இ-ள். ஸ்திரராசிகளிலே உச்சிக்கு முன்னே நற்கோள் வாரங்களிலே அஷ்டமசுத்தியுண்டாக பகை நீச்சக்கோள் நோக்குங்கோளுதையமாற்றி நாமகரணஞ் சாற்றுவது, எ-று. 84

உவநிஷ்கரணம்.

பேதைகள்மூன்றுந்திங்கள் பேறுமுத்திரங்கள்தன்னிற்
காதலன்றனக்குச்செவ்வை கதிரவன்றன்னைக்காட்டு
மாதநான்கானநாளின் மதுபசு தன்னைக்காட்டு
மோதுவாயுரைக்குச்சொன்ன வுவநிடங்காலங்காணே.

இ-ள். பிள்ளைபிறந்த மூன்றுமாதத்தில் பிள்ளைக்கு விதித்த நாளிலே அப்பிள்ளைக்குச் சூரியனைக் காட்டுவது நான்காமாதத்தில் பொருந்திய நாளில் சந்திரனையும் பசுவையுங் காட்டி உவநிஷ்கரணஞ் செய்வது, எ-று. 85

காது குத்துவது.

காணுமாறேழெண்டிங்கட் கருகுநாளீராறீரெண்
வோணமான்றலைபூசங்கள் விட்டமுத்திரங்களத்தந்
தோணிசித்திரையேசெவ்வை சுபவாரம்பன்மூன்றீரா
றாணியமிரண்டுமூன்றன் காதேழ்காதமைக்கலாமே.

இ-ள். பிள்ளைக்கு (சு)ம் மாதம் (எ)ம் மாதம் (அ)ம் மாதம் இம்மாதத்தில் (யஉ)ம் நாள் (யகூ)ம் நாள் திருவோணம் மிருகசீரிடம் புனர்பூசம் பூசம் அவிட்டம் உத்திரங்கள் (ரு)ம் அத்தம் இரேவதி சித்திரை திருவாதிரை இந்த நட்சத்திரங்களில் சுபவாரமும் சுபக்கோளுதையமுமானால் காதுகுத்துவது நன்று பக்கங்களில் துவாதசி திரயோதசி துதிகை திரிதிகை பஞ்சமி சஷ்டி சத்தமி இவை நல்லது, எ-று. 86

ஆளரிகுளமேதேள் மீனு வாடுமான் சுறுவிரண்டு
நாளிருபக்கஞ்சேருங் கிழமைகள் நடுவிற்சேடாங்
கோளவைவெட்டின் மாற்றிக் கொடுங்கதிருச்சிமுன்னே
வாளினைவென்றகண்ணாய் வைத்திடுங்காதுவல்லே.

இ-ள். மிதுனம் சிங்கம் கும்பம் விருச்சிகம் இவைகள் மீனம் மேஷம் மகரம் மத்திமம் அல்லாதவை நல்லது இரண்டுநாளும் இரண்டு பக்கமும் சேருங் கிழமைகளாகாது அஷ்டமசுத்தியுண்டாக உச்சிக்கு முன்னே கொள்வதென்றவாறு. 87

வல்லிமூன்றிரண்டைந்தொன்பான் பன்னொன்றேழ்மதியனல்
புல்லியமூன்றுபன்னொன் றழகியதொன்பத்தாறுஞ் [லன்
சொல்லியவேட்டந்தீயன் சுங்கனெட்டாறேழ்பொல்லா
நல்லனெட்டொழியப்புந்தி காதிடனவிலுங்காலே.

இ-ள். (ரு)மிடம் (உ)மிடம் (கூ)மிடம் (சு)மிடம் (யக)மிடம் சந்திரனல்லன் பாபக்கிரகம் (ரு) (சு)|(யக)மிடம் நல்லன் வியாழம் (ய)மிடம் (சு) மிடம்) (அ) மிடம் ஒழிய நல்லன் வெள்ளி (அ)மிடம் (எ) மிடம் ஒழிய நல்லன் புதன் (அ)மிடம் ஒழிய நல்லன் இந்த சுபதினத்தில் காதிட நல்லது -எ-று. 88

அன்னப்பிராசனம்.

வாலமாரெட்டாறிற் கலமுருள்கைபூசனங்கள்
சீலமாவுத்திரங்கள் சித்திரைசதையமோணங்
கோலமான்றலைபுட்சோதி பனைகுருபுக்ர்மால்நன்றாண்
மேனுவாவிரட்டையொன்பான் மீன்தேளாடொழியமேவே.

இ-ள். (சு) மாதமுதல் (அ)ம் மாதமாதல் ஆண்டு நிரம்பினாதலால் பூர்வபட்சத்திலே ஆகாசம் நிர்மலமானபோது அன்னபிராசனம் பண்ணுவது இரேவதி ரோகணி அத்தம் புனர்பூசம் பூசம் உத்

திரங்கள் மூன்று சித்திரை சதையம் திருவோணம் மிருகசீரிடம் அவிட்டம் சோதி அனுஷம் இவை நன்று வியாழம் வெள்ளி புதன் இவ்வாரங்கள் நன்று உவாவும் நவமியும் இரட்டித்த பக்கங்களும் ஆகாது மீனம் மேடம் விருச்சிகம் இவை விலக்கப்பட்டன அல்லாதவை நன்று, எ-று. 89

சொற்பயிற்றல்.

மேதையொன்பானீராறும் வெள்ளியாறேழீராறு
தீதுப்பத்தடையத்தீது திங்களக்குடையவாகா
கோதில்நான்கிருமூன்றெட்டுங் குருதியன்கொடியோர்மூன்று
மாதராயாறுபன்னொன் றழகியவாயுரைக்கே.

இ-ள். (கூ)மிடம்(சஉ)மிடம் புதன் தீயன் வெள்ளி,(கூ) மிடம் (எ) மிடம் (ய) மிடம் தீயன் (ய) மிடம் எலலாருந் தீயர் சந்திரனுடையவையெல்லாம் விலக்கப்பட்டன. (சு) (கூ) (அ) மிடம் வியாழன் பொல்லான் பாபர் ங-சு-ய-க-மிடம் நல்லர் இந்தசுபதினத்தில் சொற்பயிற்றல் நல்லது, எ-று. 90

அரைநாண்கட்ட கோடியுடுக்க.

வாய்ந்தசீர்மகவுக்காண்டு நிறம்பிடவந்தநாளிற்
றேய்ந்துநீர்தன்னீற்றாய மறையினுற்சுத்திசெய்தால்
வேய்ந்தபொன்னரைநாண்கட்டுமெழிற்பெறப்பிறந்தநாட்கே
காய்ந்தவேற்கண்ணாய்கோடி கலிங்கங்கள்கடிதுசேர்த்தே.

இ-ள். பிள்ளைபிறந்த ங-சுய-ம் நாளிலே குளிப்பாட்டி புண்ணிய யாகமும்பண்ணி பொன்னரைநாண்கட்டுவது பிள்ளைபிறந்த நாளிலே கோடிப்புடவை யுடுத்துவது, எ-று. 91

சவுளம்.

சேருமுத்திரநான்குஞ் சிறந்தவுத்திராடநான்கு
மோருமான்றலைபூசங்க ளுத்திரட்டாதிமூன்றும்
பாருடனிருத்தையெட்டா றுவாமுதற்பக்கம்பொல்லா
வாரநற்கோள்நன்றுண்டு மூன்றைந்துமயிர்நாட்சொல்லே.

இ-ள். உத்திர முதல் நான்கும், உத்திராட முதல் நான்கும் மிருகசீரிடம் புனர்பூசம் உத்திரட்டாதி முதல் மூன்றும் ரோகணியும் நல்லது ரித்தை அஷ்டமி சஷ்டி உவா பிரதமையு மொழிந்த

வை நல்லது நற்கோள் வாரங்கள் நன்றென்பது பிள்ளை பிறந்த மூன்றுமாண்டிலும் ஐந்தா மாண்டிலும் சவுளம் பண்ணுவது. 92

சவுளத்துக் காகாதநாள்.

சொல்லியமகரங்கன்னி துலையொருதியாழ்மீனண்டு
நல்லவெண்மதியமாறே ழைராழுக்தோற்றநாசம்
புல்லர்மூன்றுறுபன்னொன் றினியர்கள்புகரேபொல்லா
னெல்லையிற்குருவிராறு தீதெட்டிதெல்லாந்தீதே,

இ-ள். மகரம் கன்னி துலாம் ரிஷபம் மிதுனம் மீனம் கர்க்கடகம் கக-ம் நல்லன் சந்திரன் ௬-௧௨ உதையம் பொல்லான் பாபர் ௩-௬-ம் கக-ம் நல்லர் வெள்ளி எ-ம் இடம்வொழிய நல்லன் வியாழம் கஉ மிடம் ஒழிய நல்லன் அ-மிடத்து எல்லாருந் தீயர். 93

தீயபொன்வெள்ளிமூடந் தெக்கணவயணமாசி
யாய்தருபிறந்தநாட்க ளட்டமராசிநாட்கள்
காயசோழகஞ்செய்யார்கள் தொன்மணம்புணர்ந்தவாண்டு
தாய்மருகருப்பைநாளு மயிரளை நாசனுரி.

இ-ள். சுக்கிரன் பிரகஸ்பதி பிரகாச மில்லாதநாளும் தெக்ஷிணாயனத்திலும் மாசிமாதத்திலும் பிறந்த நாட்களிலும் விவாகம் பண்ணின வாண்டும் தன்னிட ஸ்திரீ கெற்பமுண்டான நாளும் மயிர்வினை களையப்படாதன எ-று. 94

பல்விளக்கு நாள்.

நாறியற்காகுந்திங்க ளுதையஞாயிற்றுக்குள்ள
சீரியமறையோர்க்காகுஞ் சேயவன்வேந்தற்காகும்
காரிசூத்திரற்காம்வெள்ளி பிறந்தவர்தங்கட்காகா
வீரவேற்கண்ணுயின்னாட் பல்லுகிர்விளங்குநாளே.

இ-ள். திங்கள் ஸ்திரீகளிக்காம் ஞாயிறு பிராமணற்காம் செவ்வாய் க்ஷத்திரற்காம் சனி சூத்திரற்காம், வெள்ளி பிதிற்களுக்கு விளக்கப்பட்டன சவுளத்துக்குச் சொன்ன காலங்களிலே பல்லு மூகிரும் விளக்குவது, எ-று. 95

சாஸ்வதி யோகம்.

விளங்கியகதிரோன்மேவ மேதைமூலவந்துபாகை
இளங்கொடிதன்னிலெய்த விந்துவெய்யோனுதிப்பத்

தனங்கொள்மாற்கிழமைவந்தாற் சாஸ்வதியோகமாகுங்
குளங்கெ டன்னமென்று கொடுப்பிக்கநாமகட்கே

இ-ள் ஆதித்தன் கன்னியிலேநிற்க, புதன் கன்னியில் கரு-ம் பாகையில் நிற்க, சந்திராதித்த ருதையமாக புதன்கிழமை வந்த வன்று சரஸ்வதியோகமென்று பெயராம், அற்றைநாளிற் கருப் பங்கட்டியும் பாற்சோறுமாகக் கணபதியையும் சரஸ்வதியையும் அமுது செய்விக்க எல்லா வித்தையு மெய்தும், எ-று. 96

வித்தியாரம்பம்.

மகவினுக்கைந்திற்பெண்ணை யாவிருபூசஞ்செங்கை
யகலியவோணமாதி மூன்றத்தமாகிமூன்று
பகருமுத்திரங்கள்தோணிப் பார்கலவிருத்தைப்பன்மூன்
றிகலுமெட்டுவாவீராறு நீக்கிமேலினிதுகூறே.

இள். பிள்ளை ஐந்துவயதுக்கு புகுந்தவாரே உத்தராயணம் பிறந்தவாரே ஆசாரியனைப் பூசித்து வித்தியாரம்பம் துவக்குவது. அனுஷம் அசுபதி புனர்பூசம் பூசம் திருவாதிரை - திருவோணம்-அவிட்டம்-சதையம்-அத்தஞ் சித்திரை சோதி உத்திரட்டாதி உத்திரம் ரேவதி ரோகணி இவை நல்லது இருத்தை திரயோதசி அஷ்டமி உவாவும் துவாதசியும் விலக்கப்பட்டன, எ-று. 97

கூறியசனிசெய்வாரம் நிலையோரைகொள்ளார்திங்கள்
ஏறியபத்துமாரே டாரேழியம்பார்புந்தி
சீறுடுமாறில்வெள்ளி யாறேழெட்டனைத்துந்தீயர்
வாறுபன்னொன்றுமூன்று பாபர்நன்றுகுமாய்ந்தால்.

இ-ள். சனி செவ்வாயும் ஸ்திராசிகளும் விலக்கப்பட்டன, திங்கள் ய-மிடம் உதையம், கூ-யஉ-எ-மிடம் பொல்லான், புதன் க-மிடம் பொல்லான், வெள்ளி கூ-ம் எ-ம் இடம் பொல்லன், அ-மிடத்து எல்லாருந் தீயர், பாபர்-கூ-ரு-யக-மிடம் நல்லரென்க, இனியொன்று சிற்பித்தவதனுல் சத்த சாஸ்திரம் சாமுத்திய சாஸ்திரம் காந்தருவநீதி சாஸ்திரம் இவையிற்றுக்குப் புனர்பூசம் நன்று, ஆயுர்வேதாகம் சர்வசாஸ்திரம் இவையிற்றுக்கும் அவிட்டம் நல்லது, சோதிட சாஸ்திரத்துக்கு சோதிநல்லது, கூபசாஸ்திரத்துக்கு மதற்கசாஸ்திரத்திற்கும் திருவாதிரை நல்லது, அசுபசாஸ்திரத்துக்கு அசுபதி நல்லது, கன்ம சாஸ்திரங்களுக்குத் திருவோணம் நல்லது, யோகசாஸ்திரத்துக்கு சதையம் நல்லது, எ-று. 9

உபநயனம்.

ஆய்ந்தமுப்புரிநூலேழி லணியுநாடௗனுமத்தம்
வாய்ந்தவுத்திரங்கள்சோதி மான்றலையுரோணிவாசி
ஏய்ந்தசித்திரைபூசங்கள் தோணிநன்றிருத்தையெட்டுங்
காய்ந்தபன்னொன்றுபத்து முதலுவாக்கழிமுற்பக்கம்.

இ-ள். ஏழாம் வயதில் உபநயனம்பண்ணுவது அனுஷம் அத்தம் உத்திரங்கள் ௩-ம். சோதி மிருகசீரிடம் ரோகணி அசுபதி சித்திரை புநர்பூசம் பூசம் ரேவதி இவைநன்று பக்கங்களில் ரித்தையும் அஷ்டமி ஏகாதசி பிரதமை உவாவிலக்கப்பட்டன, எ-று.

பக்கம்பின்னைந்தின்பு பாபர்தம்வாரவோரை
தெக்கணமயனந்திங்கட் குடையனசெம்பொன்புந்தி
சுக்கிரனிற்சோமன் றேற்றமுமீராறெட்டிற்
புக்கவரேழின்மூன்றி லாறுபன்னொன்றுபொல்லார்.

இ-ள். அமரபக்ஷத்துப் பஞ்சமிக்குப் பின்பு பாபவாரங்களிலும் அவருடைய ராசிகளிலும் தெட்சணாயனமும் சந்திரனுக்குடையன வியாழமும் வெள்ளியும் ௬-ம் இடம் நல்லர், ௬-ம் இடத்துக்குச் சந்திரன் உதையமும், ௰உ-ம் இடமும் பொல்லான், அ-ம் இடத்தில் எல்லாக்கோளும் விலக்கப்பட்டன, ௩-௬-௰௧ - மிடம் பாபர் நல்லார், எ-று. 100

பொல்லாதயோகம்விட்டி விதிபாதம்புகர்பொன்மூடஞ்
சொல்லாதகரணங்கம்பஞ் சூனியந்தூகணங்க
ளில்லாநாட்பிறந்தநாட்கள் பொல்லாநாளிவையொழித்து
நல்லார்களேக்கமுந்நூல் சேர்த்திடின்மறையினூலே.

இ-ள். பொல்லாத யோகங்களும் விஷ்டியும் விதிபாதமும் சுக்கிர பிரகஸ்பதி மூடங்களும் சூனியம் ஸ்தூகணம் குருட்டுநாட் பிறந்த நாட்களொழித்து பொருந்தாதநாள் தவிர சுபக்கிரகங்கள் நோக்குண்டாக ஆகாசம் நிர்மலமாகக் கொள்வது, எ-று. 101

வாகனமேற்றல்.

நான்மறையதனுற்சிங்க ஞாயிற்றில்முன்னுவாவில்
தானமர்தருநாளோணங் தையல்ஞாயிற்றுவாவி
லூனமிலத்தஞ்சோதி ளோங்குவாகனஞ்சேய்மீனம்
மானநாயமிர்தநாளில் மயிர்தனைக்குறைத்தல்மாண்பே.

இ-ள். ஆவணிமாதத்திலே பௌர்ணையோடு கூடின வோணமும் புரட்டாசிமாதத்தில் அத்தமும் அவிட்டமுங் கூடின பௌரணையில் மீனத்தில் செவ்வாய் நிற்க உவாகர்மத்துக்குத் தந்தான சுபக்கிரகங்களிலே சவுளத்துக்குச்சொன்ன காலங்களிலே வாகனங் கொள்வது, எ-று. 102

சாமாவர்த்தனம்,

மாண்படையோணமத்த மகசிரமனுஷம்பண்டி
காகம்பருமுத்திரங்கள் பூசங்கள்கடைமீன்நன்றாந்
தீண்டருமிருத்தையொட்டோ டுவாமூதற்சனிசெய்திங்கள்
கூண்டதேள்மேடமெட்டிற் கோளொழிகுளிக்கக்கோதாய்.

இ-ள். திருவோணம் அத்தம் மிருகசிரீடம் அனுஷம் ரோகணி உத்திரம்-ங-பூசங்கள்-உ-இரேவதி இவை நல்லது ரித்தை அஷ்டமி உவா பிரதமை சனி செவ்வாய் திங்கள் விருச்சிகம் மேஷம் இவை யாகாது அஷ்டமசுத்தியுண்டாக ஆகாச நிர்மலமாக சமாவர்த்தனங்கொள்வர், எ-று. 103

முடிசூட்டல்.

கோதில்மான்றலையுரோணி குதிரையுத்திரங்களத்தஞ்
சோதிசித்திரைபூசங்கள் தொணியோடனுடமோண
மேதமிலவிட்டம்நன்று மிரண்டைந்தேழ்பன்மூன்றீரா
ரோதியமூன்றும்பக்க முயர்முடிசூட்டல்நன்றே.

இ-ள். மிருகசீரிடம் ரோகணி அசுபதி உத்திரம் ங-அத்தஞ் சோதி சித்திரை புனர்பூசம் ரேவதி அனுஷம் திருவோணம் அவிட்டம் இவை நன்று, பக்கங்களில் துதிகை பஞ்சமி சத்தமி திரயோயோதசி துவாதசி திரிதிகை இவை நன்று, எ-று. 104

நன்றுநற்கோட்கள்வார மங்கிசம்நவிலுமோரைக்
கன்றியதீக்கொட்டீது கன்னியுந்துலாமுமாகா
வன்திறல்முடிசூட்டோரை யுடையவாள்கோளைநற்கோள்
நின்றிடினுறவுநன்று நோக்கிடவறிவுண்டாமே.

இ-ள். இவர்கள் நட்சத்திர ஹோரைகளிலும் சுபவாரங்களிலும் கன்னிதுலாமொழிய நன்று, அபிஷேகம் பண்ணும்போது உதிக்கிற ராசியுடையகோளை நற்கோள் மித்திரஸ்தானத்தில் நின்று நோக்கில் பத்துக்கலையுடையதாம், எ-று. 105

உண்டாயஉச்சம்நின்ற கோளுச்சம்நோக்குமாகில்
கொண்டானென்பிறநாடெல்லாம் கோளவைநீசம்நன்று
தண்டாதநீசநோக்கிற் சாலநோய்கொண்டுசாவர் [ரே.
பண்டாவுமொழியாய்வெய்யப் பகைநோக்கிற்பகையாம்பா

இ-ள். அபிஷேகம் பண்ணுகிறவன் ராசியுடையகோள் உச்சஸ்தானத்திலே நின்று உச்சஸ்தானத்துக்கோளை நோக்குமாகில் பிறநாடெல்லாங் கொள்ளுமென்பது, அந்தக்கோள் நீசக்கோளை நோக்குமாகில் நோய்கொண்டு மரணமென்பது, சத்துருஸ்தானத்திலே நின்று சத்துருஸ்தானத்தின்கோளை நோக்குமாகில் சத்துருக்கள் பலருமுண்டாம், எ-று. 106

பார்த்திடிற்றீக்கோளாறும் பன்னொன்றுமூன்றும்நல்லர்
சீற்றவேழுதையமைந்துஞ் சிறந்தபன்னொன்றேதொன்பான்
ஏற்றநற்கோள்கள்நன்றா மெட்டிடமெல்லாம்பொல்லா
ராற்றலையுடையமன்ன மணிமுடிசூடும்நாளில்.

இ-ள். பாபர் ௬-௰௧-௩-ம் நல்லர், சுபர் எ-உ-தையம்-௫-௧௧-௯-ம் நல்லர், அஷ்டமத்திலெல்லாரும் பொல்லார், இந்த சுபதினத்தில் முடிசூட்டல் நன்று, எ-று. 107

விவாகம்.

சூடியமணநாள்மூல மிரேவதிமகமண்சோதி
யோடுமான்றலையுரோணி யனுடமுத்திரங்களத்தம்
கூடுநன்றுவாவிருத்தை யட்டமிகொடியோர்வார
மாடிமார்கழிபுரட்டை மாசிநீதன்னமன்னை.

இ-ள். மூலம் ரேவதி மகம் திருவோணம் சோதி மிருகசீரிடம் ரோகணி அனுஷம் உத்திரம் ௩-அத்தம் இவை நன்று உவாரித்தை அஷ்டமி சனி செவ்வாய் ஞாயிறு ஆடி மார்கழி புரட்டாசி மாசி விலக்கப்பட்டன, எ-று. 108

அன்னமேமிதுனக்கும்ப மலவனேயிடபம்வில்லு
கன்னிகோல்நன்றுபன்னொன் றுறுமூன்றினியதீக்கோள்
பொன்னவனெட்டிற்றீயன் புகர்புதனெட்டாக
ரன்னவரேழிற்றீயர் மதிநல்லனிரண்டில்மூன்றே.

இ-ள். மிதுனம் கும்பம் கடகம் ரிஷபம் தனுசு கன்னி துலாம் இவைநன்று, ௧௧-மிடம் ௬-மிடம்-௩-மிடம் பாபர் நல்லர் வியாழம்

அஷ்டமத்தில் பொல்லான், வெள்ளி புதன் சு-பு-ல் பொல்லார், ஏ-மிடம் எல்லாருந் தீயர், சந்திரன் உ-ந-ல் நல்லன், எ-று. 109

அக்கினி பரிக்கிரகிக்க.

மூன்றறேமுத்திரங்கள் சித்திரைமுற்பார்வோணி
மான்றலையாரல்நாளில் மகரமீன்கடகங்கும்ப
மேன்றசெய்சனியிருத்தை யிவையொழிற்றெழிற்கோனோக்க
வான்றனான்மறையோரேத்த வங்கிகைக்கொள்ளலாமே.

இ-ள். உத்திரங்கள் மூன்றும சித்திரை விசாகம் ரோகணி ரேவதி மிருகசீரிடம் கார்த்திகை இவைநல்லது, மகரம் மீனம் கடகம் கும்பம் செவ்வாய் சனி உகையாங்கம் ரித்தை யிவை சுபக்கிரகங்கள் நட்பாட்சி யுச்சத்து நின்று நோக்க விசேஷித்துள்ள மறையோர் அனுக்கிரகிக்க அக்கினிபரிக்கிரகம் பண்ணுவது, எ-று.

பூமி தரிசனம்.

ஆதிரைபரணிமூல மனுடமுத்திரங்களோணஞ்
சோதிசித்திரையேபூச மகமிவை தூய்யபக்கந்
தீதுபத்திரையோடொன்பான் செங்கதிர்க்காதிவாரம்
மாதுதேளிடபந்துய்ய மதியெழவயல்செய்வாரே.

இ-ள். திருவாதிரை பரணி மூலம் அனுஷம் உத்திர மூன்றும் திருவோணம் சோதி சித்திரை பூசம் மகம் இவைநன்று. பத்திரையும் நவமியுந்தீது, ஞாயிறு சனிபொல்லாது, கன்னி விருச்சிகம் ரிஷபம் மேஷம் மிதுனம் மீனம் இவை நன்று, அஷ்டமத்திதியுண்டாக பூமிதரிசனம் பண்ணுவதென்றவாறு. 111

கிருஷியாரம்பம்.

பார்கிழக்குத்திரங்கள் படவிருபூசமத்தஞ்
சீரியவாகுமொன்பா னிரட்டித்தபக்கந்தீதாங்
கூறியமகரநண்டு குண்டைமீன்மிதுனம்நன்றாங்
காரிருங்கதிருந்தீதாஞ் செய்புகைகருதுவார்க்கே.

இ-ள். ரோகணி மூலம் உத்திரங்கள் ந-ம், இரேவதி புநர்பூசம் அத்தம் இவை நன்று. நவமியும் இரட்டித்த பக்கங்களு மாகாது இராசிகளில் மகரம் கடகம் ரிஷபம் மிதுனம் மீனம் இவை நன்று, சனி ஞாயிறு ஆகாது, பூர்வபக்ஷத்திலே யோகாக்கிர சித்தனாய் தானஞ்செய்து சில புஷ்பங்களினாலும் நீராலும் பூமியை அர்ச்சித்து கிருஷியாரம்பஞ்செய்வது, எ-று. 112

எருவிட.

கருதுமுத்திரங்கண்மூன்றுங் கரும்பனைபுநர்தம்பூசம்
பொருவில்சித்திரையேசெங்கைபொன்றிங்கள்செவ்வாய்புந்தி
யெருயிடநல்லவாகு மிருத்தையெட்டுவாவுந்தீதாந்
திருவநாயுழுவான்சொன்ன காலமேயெருவுஞ்செய்யே.

இ-ள். உத்திரமூன்றும் அநுஷம் புநர்பூசம் பூசம் சித்திரை திருவாதிரை இவைநன்று, வியாழம் திங்கள் செவ்வாய் புதன் இவை நன்று, இருத்தை அஷ்டமி உவாவப் பொல்லாது, உழவுக்குச்சொன்ன முகூர்த்தங்களிலே யெருயிடுவது, எ-று. 113

விதைக்க.

செப்பிடுமூலமத்த மிரேவதியனுடந்தீபங்
தப்பிலுத்திரங்களோண மகமுறஞ்சதையம்பூச
மொப்பிலாவுரோணியிந்நா ளுத்தமம்புணரவிட்டம்
ஐப்பசிமகாசிரங்கள் மத்திமம்விதையணங்கே.

இ-ள் மூலம் அத்தம் இரேவதி அனுஷம் சோதி உத்திரமூன்றும் திருவோணம் மகம் விசாகம் சதையம் பூசம் ரோகணி இக்நாட்களுத்தமம் புநர்பூசம் அவிட்டம் அசுபதி மிருகசீரிஷம் மத்திமம், எ-று. 134

அணங்குகேளஞ்சேழ்பன்மூன் றமைத்தபன்னொன்றுமாகு
மிணங்குமுன்னுவாவுநன்றே மீரைந்துமிரண்டுமாறுங்
குணங்கள்மத்திமமாங்குண்டை நண்டரிமகரமீனம்
வணங்குநன்றென்றுவீணை குடந்துலாஞ்சமம்வருத்தே.

இ-ள். பஞ்சமி சத்தமி திரையோதசி ஏகாதசி திரிதிகை பூரணை இவை உத்தமம் தசமி துதிகை சஷ்டி இவை மத்திமம், ரிஷபம் கடகம் சிங்கம் மகரம் மீனம் இவை உத்தமம், மிதுனம் கும்பம் துலாம் இவை மத்திபம், எ-று 1i5

வழுத்திடில்நற்கோள்வார வுதையநன்றெட்டிற்கோளைக்
கழுத்திடுமருக்கன்வாரங் காலமேநெல்லைவித்து
வொழித்திடிற்சனியின்வார மூச்சியிலெல்லைவித்து
கொழித்தசெய்வாரம்வித்துக் கொள்ளுடன்வரகுவித்தே.

இ-ள். நற்கோள்வாரம் நன்று தீக்கோள்வாரந் தீது (அ) விடத்தி லெல்லாருந்தீயர், ஞாயிற்றுக்கிழமை உதையத்திலே

நெல்லை விதைக்கலாம் சனிக்கிழமையி லுச்சியில் எள்ளை விதைக்கலாம் செவ்வாய்க்கிழமை யுதையத்திலே கொள்ளும் வரகும் விதைக்கலாம், எ-று. 116

சூறியமுதல்நாள்நன்று கரும்பிடக்கொடிக்காற்காயி
லேறியமூலம்நன்று மெள்விதைக்கனுடஞ்செக்காம்
மாறிலாமரங்கள்வைக்க வுரோணியாம்வழுதலைக்குத்
தேறியபரணிநன்றுஞ் சித்திரைபயறுவித்தே.

இ-ள். கரும்பிட அசுவதி, கொடிக்காலுக்கு ஆயிலியம் மூலம் எள்ளுக்கு அனுடம் சதையம், மரம் வைக்க உரோகணி, வழுதலை வைக்கப் பரணி, பயறுக்கு சித்திரை இந்நாட்களில் இப்பயிரிடுவது, எ-று. 117

கதிரறுக்க.

வித்தகமகமுரோணி விசாகமாதிரையோடோணம்
மத்தமேபரணிச்சால மழகிதாமிருத்தையாகா
வொத்தபொன்றிங்கள்புந்தி யுதையவாரங்கள்நன்றுங்
குத்துமேறரிதேள்நண்டு குடங்கதிரறுக்கநன்றே.

இ-ள். மகம் ரோகணி விசாகம் திருவாதிரை திருவோணம் அத்தம் பரணி இவை நன்று ரித்தை யாகாது வியாழம் திங்கள் புதன் இந்த வாரங்களு மிவர்களுதையங்களும் நன்று ரிஷபம் சிங்கம் விருச்சிகம் கற்கடகம் கும்பம் இவை கதிரறுக்க நன்றென்பது.

நவபோசனம்.

நன்றிருபூசப்பார்மா னல்கலமோண்புடசெக்கு
ஒன்றியநவ்விமூல முறம்பனையுத்திரங்கள்
துன்றுசித்திரையைத்தானஞ் சுடரின்பம்புதிதாண்தாய்தாங்
கன்றுவாவிருத்தைமீன்தேள் மறிதர்க்காந்தட்கையாய்வர்,

இ-ள். புநர்பூசம் பூசம் ரோகணி அசுபதி இரேவதி திருவோணம் அவிட்டம் சதையம் அத்தம் மூலம் விசாகம் அனுடம் உத்திரங்கள் கூ-ம் சித்திரை மிருகசீரிடம் இவை நன்று, நற்கோள்வார வுதையங்கள் நன்று இருத்தை உவாவும் மீனம் விருச்சிகம் மேடம் இவை தவிர மற்றுள்ளவையெல்லாம் நவபோசனத்துக்கு நன்று கதிரறுப்பாருமிதுவே காலமாகக்கொள்வர், எ-று. 119

தானியமிட்டு வைக்க.

கைவருமத்தஞ்செங்கை மகமுருள னுடங்கஞ்குற்
பொய்யிலுத்திரங்களோண மகசிரஞ்சனிபொன்வாரந்
தையல்மாவிருத்தைவிட்டி சராசியொழித்தாலாகிற்
றையலாய்க்குளியத்தன்னில் தாளமைதானியந்தான்.

இ-ள். அத்தம் திருவாதிரை மகம் ரோகணி அனுடம் பரணி உத்திரங்கள் நடீம் திருவோணம் மிருகசிரிடம் இவை நன்று சனியும் வியாழமும் நல்லது, ரித்தை சஷ்டியும் சராசியுந் தீது, மற்றுள்ளவை யீற்றில் குளியனிலே கர்ப்பிணியாவது கன்னிகையாவது தானியமிட்டு வைப்பது, எ-று. 120

தானியம் வாங்க.

தானமாவத்தஞ்சோதி சதையமுத்திரங்கள்விட்ட
மூனமில்விசாகந்தோணி புருனிருபூசமோண
மானசித்திரையைத்தான மனுடநாள்மகமூலத்தில்
வானுறைசனிபொன்கூடில் வைத்ததானியங்கள்வாங்கே.

இ-ள். அசுபதி அத்தம் சோதி சதையம் உத்திரங்கள் நடீம் அவிட்டம் விசாகம் இரேவதி ரோகணி புநர்பூசம் பூசம் திருவோணம் சித்திரை மிருகசீரிடம் அனுடம் மகம் மூலம் இவை நன்று சனி வியாழம் நன்று இவர்கள் உதையகாலங்களிலே வைத்த தானியம் வாங்குவது, எ-று. 121

தனுசு யிறுக்க.

வாங்கிய தனுசுவிட்ட மருவியவிருத்தைநந்தை
யோங்கியசனிபொன்வார புதையத்துக்குளியன்கூடச்
சிஞ்சுருமனுடநாளி லிருகாலிற்றிங்கள்சேர
வாங்கவன்தன்னைக்கோட்கள் நோக்கிடலழகிதென்றார்.

இ-ள். தனுசு அவிட்டம் ரித்தை நந்தை இவர்கள் பக்கமாக அனுட மிரண்டாங்காலிலே சந்திரனின்ற அச்சந்திரனை கிரகங்கள் நோக்க அந்நாளிலே தனுசயிருக்க பின்னைத் தனுசுகொள்ளார்.

யாத்திரை.

ஆரலேயாதியேழ்நாள் நந்தைசேய்கிழக்காந்தெற்குச்
சீரியமகத்தோடேழ்நாட் பத்திரைசனிசேய்திங்கட்

சாறுமேற்கனுடமாறு சயைபுதன்குருவடக்குப்
பூரணம்விட்டமேழ்நாட் புகர்சுதிர்நன்றுபோக்கே.

இ-ள். கார்த்திகை முதல் ஏழுநாளும் நந்தையும் செவ்வாய்க் கிழமையுங் கிழக்குப்போகலாம் மகமுதலேழுநாளும் பத்திரையும் சனி திங்கள் தெற்குப் போகலாம் அனுடமுத லாறுநாளும் சயையும் புதன் வியாழமும் மேற்குப்போகலாம், அவிட்டமுதலேழுநாளும் பூரணையும் அமாவாசையும் வெள்ளி ஞாயிறு வடக்குப் போகலாம், எ-று. 123

யாத்திரைக் காகாதநாள்.

போக்கினிற்பரணியார லாதிரைபூரமூன்றுந்
தீக்குமாயிலியங்கேட்டை சித்திரைவிசாகஞ்சோதி
யாக்கியமகமிருத்தை யாதியட்டமியுமாக்கள்
நீக்கிடுமருக்கன்சேய்மால் நிலேயோரைநினைக்கலாகா.

இ-ள். பரணி கார்த்திகை திருவாதிரை பூரம் ந-ம், ஆயிலியம் கேட்டை சித்திரை விசாகம் சோதி மகம் ரித்தை பிரதமை அட்டமி உவாக்கள், ஞாயிறு செவ்வாய் புதன் ஸ்திராராசியும், யாத்திரை விலக்கப்பட்டன, எ-று. 124

நினைவுறுவிட்டிவில்லு விதிபாதம்வெடியவட்டந்
தனிவுறுகிராணஞ்சூலந் தூயசங்கிராந்திதூமம்
வனிதைகேளிடித்தல்மின்னல் மழைபெய்தலிமறல்தும்மல்
இனையனசெய்யப்போகி லெய்திடுநாசமெல்லாம்.

இ-ள். விட்டிவில்லு விதிபாதம் பரிவேஷம் கிரகணம் சூலம் சங்கிரமம் தூமம் இடித்தல் மின்னல் மழை பெய்தல் இடறல் தும்மல் இவையெல்லாம் யாத்திரைக்கு விலக்கப்பட்டன, எ-று. 125

ஜன்மராசியில் யாத்திரை.

எல்லையிலியாத்திரைக்கு கேகுவாராசிக்காறிற்
சொல்லியமூன்றேடொன்பான் பதினொன்றுசுகத்தைநல்கு
மல்லல்சேய்பகையைக்கோலி லாங்கவனிராசிக்கெட்டிற்
செல்லிடிற்பகையைக்கொன்று திரும்பித்தன்பதியைச்சேரும்

இ-ள். தன்னுடைய விராசிக்கு கூ-கூ-ந-கக, போகில் சுகத்தை யுண்டாக்கும், சத்துருவைச் செயிக்கப்போகில், அவனுடைய

இராசிக்கு அ-ம் இராசியிலே புறப்படில் சத்துருவைச் செயம்பண்ணிச் சுகமேவருமென்பது, தன்னுடைய விராசிக்கு-கஉ-ம், இராசியும் அஷ்டம் விராசியும் புறப்படில் சரீரவாதை யுண்டாகும்.

பதியிடைநற்கோளெங்கும் நன்றைந்திற்பலரும்பொல்லார்
மதியிரண்டெட்டுநாலே டொன்பதிராறுமாய்க்குந்
திதியுடைவெள்ளிதீயனேற்றீய்க் கோள்கள்பத்துங்
கதியுடைமூன்றுமாறும் பதினொன்றுமினியர்காணே.

இ-ள். நற்கோள் உதையாங்கம் நன்று-ரு-மிடம் எல்லாரும் பொல்லான், சந்திரன்-உ-அ-ச-கூ-கஉ-மிடம் தீயன், சுக்கிரன்-எ-மிடம் பாபர்-கங-கூ-கக-மிடம் நல்லர், எ-று. 127

சமுத்திர யாத்திரை.

சூண்டகுருதிரைவிட்டங் கலம்பணையத்தஞ்சோதி
தூன்றுமான்றலேபோடோணந் தூலையெழக்கடலிற்போகி
வீண்டியகிதியுமெய்து மெழிற்புகர்புந்திவார
மாண்டசீர்பிரட்டை யாடி மாசிமாதமுமாகாதே.

இ-ள். அசுபதி அவிட்டம் இரேவதி அனுஷம் அத்தம் சோதி மிருகசீரிஷம் திருவோணம் இந்நாட்களிலே துலாமுதையமாக முன்பு சொன்ன வாரங்களிலே சமுத்திர யாத்திரை மிகவும் நன்று வெள்ளி புதவாரம் புரட்டாசி மாசி ஆடியும் யாத்திரை விலக்கப்படும், எ-று. 128

மாடு முதலானவை கொள்ள.

மாகராய்பாணிகேட்டை சித்திரைசதையம்வண்மை
சோதியுத்திரங்களாயி லாதிரைபுந்திசுங்க
ளேறுவாவிருத்தையெட்டிற் கோளொழிந்தொழிந்தநாளில்
மீதறிகருவிற்கன்னி கோலொடுயிவைகணன்றும்.

இ-ள். பரணி கேட்டை சித்திரை சதையம் அத்தம் சோதி உத்திரங்கள் ௬-ம், ஆயிலியம் திருவாதிரை புதன் வெள்ளி உவாவும் இருத்தை யிவையொழிந்த நின்ற நாட்களில் சிங்கம் மகரம் தனுசு கன்னி முகூர்த்தமாக அஷ்டமசித்தி யுண்டாக மாடு முதலானவை கொள்ளவும் கொடுக்கவும் நன்றென்றவாறு. 129

## நட்சத்திர பட்சணம்.

யாத்திரைபுரவிமூன்றும் பயற்றஞ்சோறெழிற்பாற்சாகம்
மாத்தயிர்நுரைத்தவெண்ணெ மானிறா றுதிரம்பாகு
சீர்த்தநெய்பாலின்சோறு கிச்சிலிசென்னற்சோறும்
வாய்த்தநற்சாதம்பாலின் வெம்பலவன்னச்சோறே.

இ-ள். அசுபதி முதலாக ௨௰௭-நாளுக்கும் பக்ஷணம் பயத்தஞ்சோறு, பாலில்வெந்த இலைக்கறி தயிர்நுரை வெண்ணெ மானி னிறைச்சி உத்திரம் புடோல் நெய்பாற்சோறு கிச்சிலி சென்னற் சோறு இலைக்கறி பாலில் வெந்த ஆப்பம் வன்னச்சோறு, எ-று.

வன்புகழ்நெல்லிமாவிற் கரைத்தநீர்மூதிரையெள்நீர்
கண்சிறுமூலந்தாறு மாதனை கருப்பணத்தோ
டென்செந்நெற்கழுநீர்பூந்தேன் சர்க்கரையேனத்துண்பால்
கண்டகுபருப்புநாட்க ளனைத்துக்குமுணவுதானே.

இ-ள். நெல்லிக்காய் மாக்கரைத்தநீர் கொள்ளு யெள்ளு கழுவினநீர் சிறுமூலகம் தாடியம் கருப்பணம் செந்நெலரிசி கழுவின நீர் தேன் சர்க்கரை பன்றி மாமிசம் பால் பருப்பு ஆக இருபத்தே
ழுங் கண்டுகொள், எ-று. 131

## திதிபட்சணம்.

காணெருக்கரிசிநீர்நெய் கஞ்சியோடுப்பிற்சோறு
பூனும்பொன்றேய்த்தநீர்தேன் புளித்தமாதளங்காய்தண்ணீர்
ஊனமாங்கோவினீரோ டரிசிபாற்சோறுகட்டி
யூன்மதியுதிதைமற்றை யுருத்தஞ்சோ றுணும்பக்கம்.

இ-ள். திதிக்குப் பக்ஷணங் கொடுக்கும்படி. பிரதமை முதலாக எருக்கிலை அரிசி கழுவினநீர் நெய்கஞ்சி உப்புற்சோறு பொன் தேய்த்தநீர் தேன் புளித்தமாதளம் நீர் கோமூத்திரம் அரிசி பாற் சோறு சர்க்கரை உதிரம் உருத்தஞ்சோறு இவை திதி பக்ஷம்.

## வாரபட்சணம்.

பக்கணம்நெய்பாற்கட்டி பயறுமெட்டியிறுநெல்லு
மூற்கமேகிழமைக்கூணும் விருப்புநெய்யெட்பாற்கட்டி
திக்குறைவினுக்குமூணுஞ் சிறுகால்பால்தயிறுமூச்சி
யொக்குமெள்ளந்திசந்தே னாம்விருளுனைவாமன்றே.

இ-ள். நெய் பால் சர்க்கரை பயறு எள்ளு தயிர் நெல்லு இவை ஞாயிறு முதலாக எழுவாரத்துக்கும் நிறையாக வறிந்து கொள்வது நெய் எள்ளு பால் சர்க்கரை திக்கு நாலுக்கும் நேரே நிறையாக அறிவது கிழக்கு முதலாகப் பொழுதுநாலுக்கும் சிறு காலேபால் உச்சிக்குத் தயிர் அந்திக்கு எள்ளு மத்தியானத்திற்குத் தேன் ஆகயிந் தடைவே பட்சித்துப்போவது பட்சிக்கவொண்ணு தவை தரிசித்துப்போவது காணக்கிடையாதவை நினைத்துப் போவது, எ-று 133

வார அடியாற் செய்யும்வகை.

அன்றடிபதினென்றின்சொ லருக்கற்கேழறைதிங்கட்கு
ஒன்றியகிடைசேய்க்கொன்பா னீறசுற்றேழ்மால்நீரார்த்தல்
பொன்றனக்கெட்டில்மாற்குச்சந்தணிபுகற்கைம்முக்கால்
கன்றியசுள்ளிகிள்ளிற்சனிக்கஞ்சிற்கரும்புகூடே.

இ-ள். ஞாயிறுக்கு கக-அடியிலினியவார்த்தைசொல்லிப்போவது, திங்களுக்கு எ-அடியிற்கடந்துபோவது, செவ்வாய்க்கு கூ-அடியில் நீர்சுற்றிப்போவது, புதனுக்கு எ-அடியில் நீரிட்டுப்போவது, வியாழத்துக்கு அ-அடியில் சந்தனம் பூசிப்போவது, வெள்ளிக்கு ரு௩-அடியில் சுள்ளிகிள்ளிப் போட்டுபோவது, சனிக்கு ரு-அடியில் கரும்புகூடிப்போவது இவையெல்லாங் காரியவிதத்துக்குத் தக்கபடி செய்துபோவது, எ-று. 134

சூழ்திசைவடக்காலச் சுடருச்சிகிழக்குத்தென்பால்
வீழ்தருமாலேமேற்கு நள்ளிராவிரையப்போகில்
வாழ்பெருங்கிளைஞாங்கி மறையவர்தமைவணங்கித்
தாழ்வில்கோள்நோக்கப்போகிற்சமைந்திடுங்கருமந்தானே.

இ-ள் வடக்குப்போகில் உதையத்துக்கு முன்பும், கிழக்கு உச்சிக்குப் பின்பும், தெற்கு அந்திப்பொழுதிலும் மேற்கு அர்த்தராத்திரியிலும், போகும்போது தன்னுடைய பந்துக்களையும் அக்கினியையும் பிராமணரையும் நமஸ்காரம்பண்ணி சுபக்கிரகங்கள் நோக்கப்போவது, எ-று. 135

எண்ணெய் வார்க்க.

கருதுமூற்பிறந்தநாட்கள் கதிர்புகர்பொன்சேய்கேட்டை
பொருவுமுத்திரங்களோணம் பூரமாதிரைபன்றுன்குந்

தருமூவர்வாரெட்டிலே ரென்றுசங்கிரந்தியெண்ணெய்
பரிசியாரேயர்பாலர் விருத்தற்குக்காலமில்லை.

இ-ள். ஜென்மநக்ஷத்திரங்களும் ஞாயிறு வெள்ளி வியாழம் செவ்வாய் கேட்டை உத்திர மூன்றும் திருவாதிரை சதுர்த்தசி உவர் சஷ்டி அஷ்டமி அவாதசி பிரதமை சங்கிரமகாலம் இவை யெண்ணெய் வாற்கலாகாது, வியாதியாளர்க்கும் விருத்தற்கும் பாலற்கும் காலமில்லை, எ-று. 136

சதாபிஷேகம்.

காலமாயிரத்தெட்டிங்கள் கழிந்தபிணத்தமோணஞ்
சாலுமுத்திரங்கள்தோணி சதையநாள்மகமேரோணி
மேலுமுத்தராயனைத்து மிசைந்தநற்கிழமையெய்துஞ்
சீலமாதங்கடன்னிற் செய்சதாபிஷேகந்தானே.

இ-ள். ஆயிரத்தெட்டு மாதஞ்சென்றபின்பு அத்தம் திருவோணம் உத்திரங்கள் (ஙு)ம் ரேவதி சதையம் மகம் ரோகணி நற்கோள் வாரங்களிலே உத்தராயணம் பிறந்தவாறே உதித்த பக்கங்களிலே சதாபிஷேகஞ் செய்வது, எ-று. 137

சிராத்தம்.

தானமாம்பரணியோணஞ் சதையமான்றலேபூரங்கள்
மான்மகம்பூசமத்த மாதிமூன்றனுடம்விட்டம்
போனபிற்பக்கமைந்தில் மேன்மாடபுரட்டைதன்னிற்
றேன்மொழிதெள்ளிநந்தையொழித்துநற்சிராத்தஞ்செய்யே

இ-ள். அசுபதி பரணி திருவோணம் சதையம் மிருகசீரிடம் மூப்பூரங்கள் மகம் பூசம் அத்தம் சித்திரை சோதி அனுடம் அவிட்டம் அமரபட்சத்து பஞ்சமிக்கும் பின்ப மாசி புரட்டாசி மாதங்களிலே வெள்ளியும் நந்தையும் ஒழிய சிராத்தம்பண்ணுவது, எ-று. 138

செய்பவன்மனைவிமக்கள் சென்மமூன்றிருபத்தேழு
மையமிலறுநான்காறு லட்டமாராசியாக
வெய்துமட்டமியொன்பானிற் கேட்டையேழ்பரணிபன்மூன்
றையமில்மகன்பின்போது சிராபயமாக்குகொள்ளே.

இ-ள். சிராத்தம் பண்ணுகிறவன் சென்மத்திரியங்களும் பாக்கிய புத்திரருடைய சென்மத்திரியங்களும் கர்த்தாவினுடைய

௨௭-௨௪-ம் நாளும் அஷ்டராசியும் இவை விசேஷித்து விலக்கப் பட்டன அஷ்டமி நவமியுடன் கூடின கேட்டையும் சத்தமியுடன் கூடின பரணியும் திரயோதசியுடன் கூடின மகமும் இவை மிகவும் நல்லதென்பது அபாரயணத்திலே சாராசியாதல் உபயமாகக் கொள்வது, எ-று. 139

### அஷ்டகை.

கொள்விருத்தச்சிரார்த்தங் குறித்தசங்கிராந்திதீர்த்தஞ்
தெள்ளுவாவாரும்பின்னுந் தென்புலத்தவர்கட்கெல்லா
மெள்ளுமுக்கால்நாள்நாதை பத்திரையிரேள்காரி
வெள்ளியிந்துதையமேகாதசியிற்கோள் விரும்பார்மேலோர்.

இ-ள். சங்கிரமகாலங்களிலும் தீர்த்தகாலங்களிலும் விருத்த சிரார்த்தம் பண்ணுவது பிதுர்க்களுக்கு முக்கால்நாட்களும் நந்தை பத்திரை சதுர்த்தசி சனி வெள்ளியும் சந்திரோதயம் பூர்வபட்சம் அல்லாதவை யிற்றிலே பாபக்கிரகம் நோக்க ௧௧-மிடம் சுத்தமா கக் கொள்வது மிக்கோரென்று சிறப்பித்தவனால் மாசி புரட்டாசி மாதங்களிலே அமரபட்சத்து சஷ்டியில் சுபகர்மங்களுக்கு விலக் கப்பட்ட நாட்களில் பாபக்கிரக வாரோதயங்களில் அஷ்டகை பண்ணுவது, எ-று. 140

### சாந்திகம் பவுஷ்டிகம்.

விரும்பியபூசந்தோணி யோணம்பார்மகவிளக்குக்
கரும்பனையுத்திரங்கள் கையொடுசதையந்தன்னில்
விரும்புதன்கதிர்சென்காரி யிருத்தையெட்டுவாக்காள்நீக்கி
தரும்பிறைவளர்நாட்செய்ய சாந்திகப்பவுடிகந்தான்.

இ-ள். பூசம் ரேவதி திருவோணம் ரோகணி மகம் சோதி அனுடம் உத்திரங்கள் ௩-ம் அத்தம் சதையம் இந்நாளிலே புதன் ஞாயிறு செவ்வாய் சனி ரிக்தையும் அஷ்டமியும் உவாக்களுமொழி யப் பூர்வபட்சத்திலே சாந்திகம் பவுஷ்டிகம் பண்ணுவது, எ-று.

### கெஜசாந்தி.

தானிருபூசந்தோணிசதையமுத்திரங்கள்விட்ட
மான்மகஞ்சோதியத்தஞ் சித்திரைபனைபார்வாசி
பான்மதிவெள்ளிசெம்பொன் பண்டிதன்வாரந்தன்னி
லானையின்சாந்திசெய்கை யிருத்தைநீக்கினியசொல்லாய்.

இ-ள். புநர்பூசம் பூசம் ரேவதி சதையம் உத்திரங்கள் ந-ம் அவிட்டம் மகம் சோதி அத்தம் சித்திரை அநுஷம் ரோகணி அசு பதி இவை யீற்றிலே வெள்ளி வியாழம் புதன் திங்கள் இவர்கள் வருகிற வுதையங்களிலே இருத்தை யொழித்து கஜசாந்தி பண்ணு வது, எ-று. 142

அசுவ சாந்தி.

சொன்முறம்விட்டமாறல் தோணிமான்றலையேவாசி
மன்னுகைபூசம்நற்கோள் வாரத்தையிருத்தைமாற்றிப்
பன்னியசரோபயத்திற் பரிசாந்திசெய்மின்பாங்காம்
மின்னறுய்கதிரோன்சோதி நிற்குநாள்மிகவுநன்றே.

இ-ள். விசாகம் அவிட்டம் கார்த்திகை ரேவதி மிருகசீரிடம் அசுபதி அத்தம் பூசம் இந்நாட்களில் உதையங்களிலே சராசி உபைய ராசிகளிலே ரித்தை கூடாத பக்கங்களிலே அசுவசாந்தி பண்ணுவது ஆதித்தன் சோதியில் நிற்குநாள் அசுவசாந்தி மிக வும் நன்று, எ-று. 143

மாறுவிசாதி.

நன்றுகார்த்திகைமாதத்தில் நளிர்மதிவளர்பக்கத்தி
லன்றுமட்டமியீராறி லமைந்தவான்பூசநாளில்
வன்றிறலுதையஞ்சுத்தி மாறுவிபண்ணுஞ்சோதி
யொன்றுநாள்வெய்யோன்சாந்தி யானைவேந்தற்கோதே.

இ-ள். கார்த்திகை மாதத்தில் பூர்வபட்சத்தில் அஷ்டமி துவா தசியில் இவை யீற்றிலே பூசத்திநன் றுதையஞ் சுத்தியாக மாறுவி பண்ணுவது, சோதியிலாதித்த நிற்குநாளிலே ராசாவானவன் சரசாந்தியும் பண்ணுவது, எ-று. 144

ஓதுமுத்திரங்களத்த மோனமான்றலைமாவிட்டஞ்
சோதிசித்திரையோடாரல் தோணிநாளிருத்தைநீக்கி
மேதைபொன்கதிரோன்வெள்ளி மெந்நிலையோரைதன்னில்
மாதராய்மறையோர்க்கெல்லாச் சுகங்களுஞ்செல்கைமாண்பே

இ-ள். உத்திரங்கள் ந-ம்-அத்தம் திருவோணம் மிருகசீரிடம் அசுபதி அவிட்டம் சோதி சித்திரை கார்த்திகை ரேவதி இந்நா ளில் ரித்தை யொழிந்த பக்கங்களிலே ஞாயிறு புதன் வியாழம் வெள்ளி இவை வாரவுதையங்களிலே ஸ்திராசியில் ராஜாக்களுக் கெல்லாம் சுபகன்மங்களுக்குஞ் செய்யலாம், எ-று. 145

### வாகனமேறவும் ஆயுதம் பயிற்றவும்.

மான்றலையுத்திரங்கள் மகமத்தம்புநர்தமோணம்
என்றசித்திரைபார்சோதி ரேவதிபனைமாநந்தை
தோன்றுபூரணைபொன்புந்தி சுகன்மதிகதிர்வாரங்க
ளான்றவாகனங்களேற வாயுதம்பயிற்றலாமே.

இ-ள். மிருகசீரிடம் உத்திர மூன்றும் மகம் அத்தம் புநர்பூசம் திருவோணம் சித்திரை ரோகணி சோதி ரேவதி அனுடம் அசுபதி இந்நாளிலே நந்தை பூரணை இந்த பக்கங்களிலே வியாழம் புதன் வெள்ளி திங்கள் ஞாயிறு இவ்வார வுதையங்களிலே வாகனங்களேறவும் ஆயுதம் பயிற்றவும் நன்று, எ-று. 146

### யுத்தஞ் செய்க.

ஆதிரைபரணியாரல் மகம்பூசமாயில்கோட்டை
யோடுசித்திரைபூராட மோணம்பார்விளக்கிருத்தை
காடியவெட்டிசெம்பொன் கடுங்கோள்களுதையாவாரந்
தீதிலாப்படையைக்காணச் செருச்செய்யவழகிதன்றே.

இ-ள். திருவாதிரை பரணி கார்த்திகை மகம் பூசம் ஆயிலியம் கேட்டை சித்திரை பூராடம் திருவோணம் ரோகணி சோதி இந் நாளுக்கும் ரித்தை விஷ்டியும் வியாழம் ஞாயிறு சனி செவ்வாய் இவர்களுடைய வாரோதயங்களும் படைகாணவும் யுத்தஞ் செய்யவும் நலம், எ-று. 147

### பொன் பூண.

அழகியகுதிரையத்தஞ் சித்திரையனுவம்பூசந் [திங்க
தொழில்கொள்வான்றலைபார்தோணி சுங்கன்மாற்சனிபொன்
எழில்கொள்பூரணையேநந்தை, யெருகியாழ்தனுமீன்கன்னி
தொழுதுபொன்பூணுமாதற் கணியெலாம்புகழ்ந்துகாணே.

இ-ள். அசுபதி அத்தம் சித்திரை அனுடம் பூசம் மிருகசீரிடம் ரோகணி ரேவதி இந்நாட்களிலே வெள்ளி புதன் சனி வியாழம் திங்கள் இவ்வாரங்களிலே பக்கம் பூரணை நந்தையிலே இராசகளில் ரிஷபம் மிதுனம் தனுசு மீனம் கன்னி இவையில் பொன்பூண நன்று இது விசேஷித்து ஸ்திரீகளுக்கு அழகு, எ-று. 148

கோடியுடுக்க.

பூட்டுமுத்திரங்கள்தோணி புரவிபாரிருபூசங்க
ளீட்டியவத்தமாதி யைக்தெழில்விட்டநற்கோள்
சூட்டியவாரநன்ருந் துயரமெட்டிருத்தைசிங்கங்
கோட்டியசரங்கள்நீக்கி நின்றதிற்கூறைசாத்தே.

இ-ள். உத்திரங்கள் இம்மூன்றும் ரேவதி அசுபதி ரோகணி புநர்பூசம் அத்தம் சித்திரை சோதி விசாகம் அனுடம் அவிட்டம் இவைநன்று, நற்கோள்வார உதையங்கள்நன்று அஷ்டமி-ரித்தை. சிங்கம்-மேஷம்-கற்கடகம்-துலாம்-மகரம் இவையீற்றில் கோடிப் புடவை யுடுக்கலாகாது, எ-று. 149

சாத்திடுகூறைநற்கோ ளுதையத்துத்தண்ணியோர்கள்
ஏகத்துமூன்றுபன்னென் றினியரேல்மிகமாழ்நல்லன்
நீத்திடுமெட்டிற்கோளை நின்றபன்னிரண்டுநான்கு
மாற்றவன்புகரேன்றீய னுடைமாட்டதிகநல்லாய்.

இ-ள். நற்கோள்வார வுதையங்கள் நன்று பாபர் ந-சு-கக-மிடம் நல்லர்-புதன்-எ-ம்-நல்லன்-அ-மிடத்து எல்லாரும் பொல்லார் கஉ-ச-ல் வெள்ளி பொல்லான் அல்லாதவை யெல்லாம் நன்று, எ-று. 150

தெய்வப்பிரதிஷ்டை.

அதிகநன்றுளபூசங்க ளனுடமைந்தானந்தோணி
குதிரைபுத்திரங்கள்மூன்றுங் கோணுகநன்றுசோதி
புதியமாலீசனத்த மத்திமம்புகட்கோள்வாரங்
கதிர்வடக்குருநாள்தெய்வப் பிரதிட்டைசெய்கமலக்கண்ணே.

இ-ள். ரோகணி புநர்பூசம் அனுடம் மிருகசீரிடம் அசபதி ரேவதி உத்திரங்கள் ந-ம் மாதம் இவை யுத்தமம் சோதி திருவோணம்-அத்தம்-இவை மத்திமம்-அல்லாத இவை மத்திமம் - அலலாதவையாகாது, நற்கோள்வார உதையங்கள் நன்று, உத்தராயணம் பிறந்தவாரே பிரதிஷ்டை பண்ணுவது, எ-று. 151

கண்ணிலாநாட்கள்மாசி அடியபிற்பக்கமொன்பான்
எண்ணுவாவிரட்டைபக்க மிராப்புகர்செம்பொன்மூடன்
தண்ணியசகடம்விட்டி சராசிதலையாய்நின்ற
வண்ணல்தன்றேைரக்காறெட் டூராறுபிரதிஷ்டைக்காகா

இ-ள். கண்ணில்லாத நாட்கள் மாசிமாதம்-அமரபட்சம்-நவமி உவா இரட்டித்தபக்கம் இராத்திரி சுக்கிரன் பிரகஸ்பதி அஸ்தமனம் சகடம் விஷ்டி சரராசிகளில் கர்த்தாவினுடைய ராசிக்கு கூ-அ-கஉ-மிராசியும் இவை பிரதிஷ்டைக்கு வற்சிக்கப்பட்டது, எ-று.

ஆகாதபாபர்மூன்றோடாறு பன்னொன்றுநல்லர்
ஏகார்களெட்டிலியாரு மேழிடம்வெள்ளிபொல்லான்
மாகாறுமதியநான்கு மீராறுமருவிற்றீயன்
பாகாரும்பவிடையில்வெள்ளைமிகநன்று பிரதிஷ்டைபண்ண

இ-ள். பாபர் ங-சு-கக-மிடம் நல்லர், அ-மிடம் எல்லோரும் பொல்லார், எ-மிடம் வெள்ளி தீயன், சந்திரன் சு-கஉ-மிடம் தீயர், ரிஷபத்தில் வெள்ளி யுதையமாகப் பிரதிஷ்டை செய்யப்பெறில் விசேஷித்து நன்று, எ-று. 153

பண்மொழிசாஞ்சேய்பின்னிற் பதினான்குமுன்னிலெட்டுப்
பெண்ணொழுவற்குநன்றும் பெருகியசரோபயங்க
ளெண்ணும்பெண்தெய்வநாட்டா மிறைவர்மூவர்க்குமா
டண்ணியசங்கிராந்தி மாதாந்தத்திருநாள்சாற்றே.

இ-ள். சரராசியும் - செவ்வாய்க்கிழமையும் - அமரபட்சத்து - சதுர்த்தசியும், பூர்வபட்சத்து அஷ்டமியும்-இவை சத்த மாதாக்களை எழுந்தருளவிக்கலாம், சரராசிகள் உபையராசிகளும் ஸ்ரீதெய்வப்பிரட்டைக்கும் ராஜாவினுடைய நாளுக்கும் ஊர்பிறந்த நாளுக்கும் பொருந்து நாட்களிலே சங்கிரம காலத்திலும் மாதாந்தங்களிலும் திருநாளெழுந்தருளிவிப்பது நன்று, ரித்தையும் இரட்டித்த பக்கங்களும் உவாவும் மூதேவி பிரதிஷ்டைக்காமென்பது முன் சொன்ன நாட்களிலே சுபக்கிரகங்கள் நோக்க பதின்மூன்றும் பிரதிஷ்டைபண்ணுவது, ஏ-று. 154

திருவமர்தேவர்க்கெல்லாஞ் சிறந்தவைகாசிதிங்க
ளுரியகற்பக்கந்தன்னிலுயர்ந்தயர்ந்த நாள்வாரமேத்தத்
தருமிகப்பவுத்திரங்கள் தருமருக்கொழுந்துசாற்றும்
பொருவருமாடிதிங்கள் பதினான்கட்டமியும்போற்றே.

இ-ள். வைகாசிமாதத்தில் பூர்வபட்சத்தில் சுபகன்மங்களுக்குச் சொன்னநாளில் நற்கோள்வார உதையங்களில் ஆகாசம் நிர்மலமாகத் தேவர்களுக்கெல்லாம் பவித்திரமும் மருக்கொழுந்து சாத்துவது அமரபக்ஷத்து ஆடிமாதத்திலேயாவது அஷ்பதினான்கிலாவது சாத்துவது, எ-று 155

வாஸ்துயிட.

போற்றுமுத்திங்களோணம் பூசங்கள்மகம்பார்த்தோணி
தோற்றியசதையஞ்சோதி மான்றலையனுடந்தாய்தா
மாற்றலெட்டுவாவிருத்தை மந்தனில்நற்கோள்வாரத்
தேற்றமூர்கருப்பதிக்க வியம்பினார்நிலையோரைக்கே

இ-ள். உத்திரமூன்று திருவோணம் புநர்பூசம் பூசம் மகம் ரோகணி ரேவதி சதையம் சோதி மிருகசீரிடம் இவை நன்று அஷ்டமி உவா விருத்தையாகாது, சனி வியாழம் வெள்ளி புதன் திங்கள் இவ்வாரோதயங்களிலே ஸ்திரராசிகளிலே ஊர்க்குப் பதிக்க வித்துவான்களுடனே கூடப்போய் சுபநிமித்தங்களுஞ் செய்யப் பூமியிலே சென்று கந்தம் பார்த்து மண்ணையள்ளி வாஸ்து நிச்சயிப்பது, எ-று. 156

அகமெடுக்க.

நிலைதருங்கீழ்சாரில்லந் தைமாசிநின்றதென்சா
ரலகில்சித்திரைவைகாசி யாடியாவணிமேற்சார்வாய்
மலருமைப்பசியேவாய்த்த கார்த்திகைவடசார்வாகு
மூலகர்பங்குனியோடானி புரட்டாசிவில்லொழித்தார்

இ-ள். தை மாசிமாதம் கீழ்சார், சித்திரை வைகாசி தென்சார் ஆடி ஆவணி மேல்சார், ஐப்பிசி கார்த்திகை வடசார், அகமெடுப்பது பங்குனி ஆனி புரட்டாசி மார்கழி இவை யொரு திக்கிலும் அகமெடுக்கலாகாது, எ-று. 157

ஒழுக்கியகுண்டையாழ் நண்டுயர்கிடன்வடக்கா
மழற்புரியரிவைகோலுக்கழகிய கிழக்குந்தெற்கும்
விழித்திடுந்தேளும்வில்லு மகரமும்மேற்குந்தெற்கும்
வழுத்தினார்குடமீன்மேடம் வாசலாம்வடக்குமேற்கே.

இ-ள். ரிஷபம் மிதுனம் கடகம் இவை யிற்றுக்கு வடக்குங் கிழக்கும் வாசற் பொருந்தும் தனுசு விருச்சிகம் மகரம் இவை யிற்றுக்கு மேற்கும் தெற்கும் பொருந்தும் கும்பம் மீனம் மேஷம் வடக்கும் மேற்கும் வாசல் பொருந்தும், எ-று. 158

வடங்கொள்பார்தோணிபூச மிருகசீர்மனுஷமத்தந்
திடங்களுத்திரங்கணன்று சித்திரைபுநர்தமூலந்
தடந்தருவிட்டஞ்சோதி சதையபத்திம்முற்பக்கந்
தெடம்பெருவிட்டிருத்தை யுவைவெட்டிற்கோள்கள்நீக்கே

இ-ள். ரோகணி ரேவதி பூசம் மிருகசீரிடம் அனுஷம் அத்தம் உத்திரங்கள் மூன்று இவை யுத்தமம் சித்திரை புனர்பூசம் மூலம் அவிட்டம் சோதி சதையம் இவை மத்திபம் அல்லாத நாட்கள் அதமம் பூர்வபட்சத்து அஷ்டமியும் ரித்தையும் உவாவும், ஆகாது நீக்கி நின்ற பக்கங்களிலே அஷ்டமசுத்தியுண்டாகக் கிரகமெடுப்பது, எ-று. 159

கிரகாரம்பம்.

நீத்திடும்பாபவாரம்பிலையோரை யுபையங்கோண்மீன்
கோத்தேடசிங்கருசெம்பொன் குலம்புகர்திங்களேற்றி
லேத்துமால்வெள்ளிநன்று மேள்புகர்கொடிதிராறிற்
றீத்திரமதியார்பன்னொன் றுமூன்றினியதீக்கோள்

இ-ள். பாபக்கிரக முதையங்கள் விலக்கப்பட்ட சுபக்கிரகவார வுதையங்களும் ஸ்திரராசியும் உபையராசியும நன்றென்பது விருச்சிகத்திலும் ரிஷபத்திலே புதனை சுக்கிரனும் விசேஷித்து நன்மை பண்ணுவான் வெள்ளி ஏழாமிடமொழிய நல்ல சந்திரன் புதன் கஉ-மிட மொழிய நல்லன் பாபக்கிரகங்கள் கக-மிடம் க-ங-மிடம் நல்லனென்பது தேவாலயங்களுக்கும் கிரகங்களுக்கும் வாஸ்து வகுக்கவும் கிரகாரம்பத்துக்குச் சொன்ன காலங்களிலே கொள்வது, எ-று. 160

குடிப்புக - திருவாண்டெழு.

தீங்கிலாவில்லெடுக்கச் செப்பியகாலந்தன்னி
லோங்கியமாசியாடி யொழிந்துள்ளகாலமெல்லா
மாங்குடிபுகுதமாதே யாடியிலாதிரைக்கு
ஈங்கிவைமன்னர்க்கெல்லா மெழுத்திடமினிதென்றுரே.

இ-ள். கிரகாரம் பத்துக்குச்சொன்ன நாட்களிலே மாசியும் ஆடியுமொழிய அல்லாதவையெல்லாங் குடிப்புக நன்றென்பது ஆடிமாதத்திலே திருவாதிரையினன்று உச்சியம்பொழுது விராசாவுக்குத் திருவாண்டெழுத்திடுவது, எ-று. 161

தீட்சை.

இனியதேறுத்திரங்க ளிரேவதியவிட்டமான
மனுடமான்றலேபூசங்க ளாதிரையத்தங்கேட்டை
தனிவுறுமகமேமூலஞ் சோதிசித்திரைசெய்வாரங்
குனிசிலைநுதலாய்நன்று குருவுரைகொள்ளுவார்க்கே.

இ-ள். ரோகணி உத்திரங்கள் மூன்று ரேவதி அவிட்டம் திருவோணம் அனுஷம் மிருகசீரிடம் புநர்பூசம் திருவாதிரை அத்தம் கேட்டை மகம் மூலம் சோதி சித்திரை இவை நன்று கிழமைகளில் செவ்வாய் நன்று, எ-று. 162

ஒல்லைபிலுவாவிருத்தை யட்டமியெட்டிற்கோளே
புல்லியமாசியாடி புரட்டைமார்கழியொழித்து
நல்லமுற்பக்கதிற்கு மோரைகோளமைந்தநாளிற்
சொல்லுவார்சங்கிராந்தி தோன்றில்மெய்ச்சுத்திபண்ணே

இ-ள். உவாவும் இருத்தை அஷ்டமி மாசி ஆடி புரட்டாசி மார்கழி இவை யொழித்து பூர்வபட்சத்திலே ஸ்திரராசிகள் உதையமாக அஷ்டமசுத்தியுண்டாக ஆகாசம் நிர்மலமாகக்கொள்வது சிஷன் பிறந்த நாட்களிலேயாதல் மற்றும் புண்ணிய யோகங்களிலேயாதல் சிஷனே சரீரசுத்தி பண்ணுவது, எ-று. 163

குளங் கிணறுகெல்ல.

சுத்தமுத்திரங்கள்கேட்டை தோணிசித்திரைபாரோண
மத்தமான்றலைபூராட மகமைந்தேள்மூன்றுபன்னொன்
றொத்தபன்மூன்றுமொன்று திதியோரைகுடமீன்கேறு
குத்தியவெறுதிரண்டிற் குளங்குழிகூவல்கெல்லே.

இ-ள். உத்திரங்கள் மூன்றும் கேட்டை ரேவதி சித்திரை ரோகணி திருவோணம் அத்தம் மிருகசீரிடம் பூராடம் கம்பஞ்சமி சத்தமி திரிதிகை ஏகாதசி திரையோதசி பிரதமை ராசிகளில் கும்பம் மீனம் மகரம் ரிஷபம் கடகம் இவை யிற்றிலே சுபக்கிரகவாரோதயங்களிலே அஷ்டமசுத்தி யுண்டாக குளங் குழி கிணறு கெல்லுவது, எ-று. 164

கெல்லுமாக்குலங்கள்கூவல் கதிர்துலாம்மத்திமத்திற்
செல்லிநாட்பெருநோகுஞ் சித்திரைநடுவிற்பத்தில்
மல்லமாக்கரைகள்கட்டி மலையகாமெட்டிற்சுத்த
மல்லறுகுழலாய்கோள்க ளழகிதோற்கிழமையாய்ந்தே.

இ-ள். ஐப்பசிமாதம் நடுவிற்பத்தில் முன்புசொன்ன நாட்களிலே குளங்கிணறு வெட்டப்பெருநோம் சித்திரைமாசத்தில்நடு

விற்பத்தில் கரைகட்டில் மலைபோலேயாம் சுபக்கிரகங்களிலே அஷ்டம சுத்தியுண்டாக முன்புசொன்ன முகூர்த்தத்திலே கொள்ளுவது எ-று. 165

வியாதிநீங்காதபலன்.

ஆயில்முப்பூரஞ்சோதியாதிரைபரணிகேட்டை
ஏயுநற்சதையம்பக்கமீராறுநான்காறுன்பான்
காய்கதிர்செவ்வாய்காரிவாரங்கள்கலந்தநாளில்
நோய்கொளில்மரணமென்று நவின்றனர்நூல்கள்வல்லோர்.

இ-ள். ஆயிலியம் முப்பூரம்சோதி திருவாதிரைபரணி கேட்டை சதையம் துவாதசி சதுர்த்தி சஷ்டி நவமி இவைகளும் ஞாயிறு செவ்வாய் சனிக்கிழமைகளுங் கூடினநாளில் வியாதிபட்டவனுக்கு மரணமென்பது எ-று. 166

வியாதியஸ்தர் மருந்துண்ண.

வல்லிருபூசமத்தமான்சோதியுருள்மாப்பெண்ணை
சொல்லுமுத்திரங்களவிட்டந்தோணிமான்றலைசெக்கோண
மெல்லியசரனல்வாரம்வெய்யவனென்கோள்சுத்தம்
செல்வமாருத்தைநீக்கிமருந்துண்ணத்தெரிந்துகொள்ளே.

இ-ள். புநர்பூசம் பூசம் அத்தம் சித்திரை சோதி ரோகணி அசுவதி அனுஷம் உத்திரமூன்றும் அவிட்டம் ரேவதி மிருகசீரிடம் சதையம் திருவோணம் சராராசிகளும் வியாழம் வெள்ளி திங்கள் ஞாயிறு புதன் பக்கங்களில் இருத்தையொழிய மற்றுள்ளவையிற்றில் சுபக்கிரங்கள் நோக்க அஷ்டமசுத்தியுண்டாக மருந்துண்பது எ-று. 167

அறுக்கஃவெதுப்ப.

தெரிதருமாயில்கேட்டைசெங்கைமூலஞ்சேய்காரி
விரிதருவிருத்தைகன்னிமேடகோள்கடகம்தம்மை
எரிதருதீக்கோள்நோக்கவெட்டிடஞ்சுத்தமாக்கி
கருதுநோயருத்துச்சுட்டுக்காரம்வைத்தட்டைகட்டே.

இ-ள். ஆயிலியம் கேட்டை திருவாதிரை மூலம் செவ்வாய் சனி இருத்தை கன்னி மேடம் துலாம் கடகம் இந்தராசிகளைப் பாபக்கிரகங்கள் நோக்க அட்டமசுத்தியுண்டாக வியாதிகளறுக்கவும் சுடவும் காரம் வைக்கவும் அட்டைதட்டவும் நல்லது எ-று.

### வியாதியஸ்தர் குளிக்க.

கட்டியவுரோணிசோதிகலமகம்புநர்தமாயி
லொட்டியவுத்திரங்கள்தவிர்த்திவையொழிந்தநாளி
லட்டமிருத்தைதயான்றதசமியில்வெள்ளிதிங்கள்
சுட்டியவுதையவாரந்துயர்கெடக்குளிக்கநன்றே.

இ-ள். ரோகணி சோதி ரேவதி மகம் புநர்பூசம் ஆயிலியம் உத்திர மூன்றும் இவை யொழிந்தநாளிலே அஷ்டமி இருத்தை தசமி இப்பக்கங்களிலே வெள்ளி திங்கள் இவ்வாரவுதையங்களிலே வியாதியஸ்தர் குளிப்பது எ-று. 169

### மரணதோஷம்.

நன்றுணர்முக்கால்காலாம்வருநாட்பத்திரையாம்பக்கம்
வென்றிகொள்பொன்சேய்வெள்ளிவாரத்திலவித்தல்கூட்டம்
என்றிவையுளவன்றளிவிறந்தவன்மரபுதன்னிற்
பொன்றுவர்மூவரென்றுபுகன்றனர்புலவர்பொன்னே.

இ-ள். முக்காலுங்காலு மாகவருநாட்களிலே பத்திரைவியாழம்செவ்வாய் வெள்ளி இவைகூடினநாளில் சாதல் சுடுதல் செய்யில் அவனுடைய வங்கிஷத்திலே மூன்றுபேர் மரணமுண்டென்பது.

### மரணதோஷ நிவாரணம்.

பொன்னனுய்தருப்பையாலே புனர்தேகவுருவம்பண்ணி
பின்னுமந்தணரையூட்டிப் பிறப்பிலாத்தேவர்தம்மை
யுன்னியபூசைசெய்தா லொழிந்திடுஞ்சாக்கோடென்று
மின்னிடைமடந்தைநல்லாய் விளம்பினர்தமிழ்விரித்தோர்

இ-ள். தருப்பையாலே பிரேதம்பண்ணி புநர்தேகத்தைத் தகனஞ் செய்வித்து பிராமணபோசனஞ் செய்வித்து தேவர்களையும் பூசிக்கத் தோஷந் திரும், எ-று. 171

### க்ஷேத்திரலபிதம்.

விரிந்தவான்பரணியோணம் விசாகமோடத்தநாளில்
கருத்துடைநாலாங்காலிற் கடகம்வந்துதிப்பக்கண்டு
திருத்தியசெய்யில்மண்ணைத் தின்றிடச்செல்வமிஞ்சி
பொருத்தமும்புகழுமுண்டாம் பூமியுந்தன்னுதாமே.

இ-ள். பரணி திருவோணம் விசாகம் அத்தம் இவை யீற்றிலே நாலாங் கால்களிலே கற்கடகமுதையமாக க்ஷேத்திரத்தில் பூமியைப் பார்த்து மண்ணைத்தின்ன அந்தப் பூமி தன்னுவதாய் ஐஸ்வரிய முண்டாம், எ-று. 172

நாவாயுங்கள்ளருப்புகாமல்.

நாவியவிலங்குகள்ளர்தன்செய்யிற்புகாமல்வேண்டி
லோவில்கார்த்திகையாம் நாளின்மான்றலையுதிக்கும்போது
மேவுபாழ்மனையெறப்பில்விறகினைக் கொணர்ந்துசெய்யின்
பூவைகோள்வரம்புதோறு மெரித்திடிற்புகுதாதொன்றும்

இ-ள். மிருகங்களும் கள்ளரும் தன் செய்யிற் புகாதுவேண்டில் கார்த்திகை நக்ஷத்திரத்தில் மிருகசீரிடம் உதிக்கும்போது பாழ்மனையெறப்பின் விறகைக்கொண்டுவந்து செய்யின் வரப்புதோறு மெரிக்க யாதொன்றுமாகாது, எ-று. 173

ஒன்றியசேயின்வாரத்துவர் பதின்மூன்குதன்னில்
வன்றிறவிட்டமத்தமகசிரநாளிற்சிங்கங்
கன்றியவில்லுதிர்ப்பக்காஞ்சிரமுளையநாட்ட
வென்றிகோள்விலக்குசெய்யில் மேவிடாமேவில்வீயும்

இ-ள். செவ்வாய்க்கிழமையும் சதுர்த்தசியாதல் உவாவாதல் இப்பக்கமும் அவிட்டம் அத்தம் மிருகசீரிடம் இந்நாட்களுங் கூடிவந்தநாள் சிங்கம் தனுசுவாதல் முகூர்த்தமாகக் காஞ்சிரமுளையைச் செய்யில் வரம்பில் நாலுமூலையும் நாட்டமிருகங்கள் நவாய்கரை புகாது புகுந்தால் மரிக்கும், எ-று. 174

மேவுமாதிரையுநன்று வில்லெழுமனையிற்செய்யி
லேவியகோணம்நான்கு மெட்டியன்முளையைநாட்டத்
தீமிருகங்கள்வாழ லெலிநாவாய்விட்டிற்செய்யில்
தாவிடாமனையிற்சாரச் சாருமேல்மரணஞ்சாற்றே.

இ-ள். திருவாதிரையினன்று தனுசு உதையமாக மனையிலுஞ் செய்யில் நான்கு கோணங்களிலும் எட்டிமுளையை நாட்ட மிருகங்கள் எலியாமல் நாவாம் புகுதாதென்பது, எ-று. 175

சத்துருநாசம்.

சாற்றுமாதிரையிறசெவ்வாய்க் கிழமையிற்றகறியாதல்
சீற்றமாமகரத்தாலே சேயெழலிரப்பிகாலிற்

ரேற்றியவிறகைவாங்கிச் சுடலினிற்றீமைமூட்ட
யாற்றலர்மாய்ந்துபோகுஞ் சூனியமயிலேயன்றாய்

இ-ள். செவ்வாக்கிழமையில் திருவாதிரையன்று மேஷத்தி லாதல் மகரத்திலாதல் செவ்வாயுதிப்ப அப்போது சத்துருவின் மனையெறப்பில் விறகை வாங்கிச் சுடுகாட்டிலிட்டெரிக்கச் சத்து ருக்கள் மாய்ந்துபோவார்கள், எ-று. 176

குமர்நீங்க.

அன்னைசித்திரைமகரத்துச் சித்திரையானநாளில்
முன்னரைதன்னிற்றிங்க ளுதிப்பதுமுகூர்த்தமாகக்
கன்னியைப்பஞ்சவர்ண நூல்புனைந்தரையிற்கட்டி
மன்னியகுமரிநீங்கி வாட்கையுமெய்துமண்மேல்

இ-ள். சித்திரைமாதத்துச் சித்திரைநாள் முன்னரையிற்றிங்க ளுதையமாகக் கன்னிகையா யிருப்பவளைக் குளிப்பாட்டி பஞ்ச வர்ண நூலாலே குளிகையாக்கி அரையிற்கட்ட குமரிநீங்கி வாட் கையுமெய்தும், எ-று. 177

புருஷனை ஸ்திரீயுடன் சேர்ப்பிக்க.

மண்ணுடைமகளைப்போத வேண்டாய்வாழ்வார்தம்மை
பெண்ணுடன்கூட்டவேண்டிற் பெரியசித்திரைநாளத்தஞ்
திண்ணிதாவுதிப்பத்திங்கட் கிழமையிற்றிருவன்றனைப்
புண்ணியநறுநீராட்டிப் புணர்முலைசாந்தம்பூசே.

இ-ள். ஸ்திரீகளுடன் சேராமல் யோடிப்போவாரைச் சேர்க்க வேண்டில் சித்திரைமாதநாள் அத்தமுதையமாகத் திங்கட்கிழமை யில் ஸ்திரீயைக் குளிப்பாட்டி சந்தனத்தைப்பூசிக் கூட்டினால் ஒரு நாளும் பிரியார், எ-று. 178

வாரவிசேஷம் தற்கால விசேஷம்.

சந்திரன்விதைசேய்பூசல் சனிதவங்கதிர்சேவித்தல்
மந்திரிமணமால்கல்வி மயிர்வெள்ளிவாரனன்று
மந்தமில்முடியேவிஞ்ஞை யரும்பொருள்கன்னிதானம்
வந்துருபகைநோய்தீர்க்க வருவதேகோலமானே

இ-ள். முன்புசொல்லிப் போந்தவை யீற்றில் விசேஷங்கள் விதைக்கும், செவ்வாய் புசல், சனி தவசு ஞாயிறு சேவிக்க, வியா

மும் விவாகஞ்செய்ய, புதன் வித்தியாரம்பண்ண, வெள்ளி சௌளத்துக்கும் விசேஷம், அபிஷேகம் வந்தெய்தியபோதும் வித்தை அர்த்தம் வந்தெய்தியபோதும் சத்துருவை செயித்தால் உயித்தியம் வந்தெய்தினபோதும், கன்னியாதானம் வந்தெய்தினபோதும் சத்துருவை யழிக்கலானபொழுதும் எய்தினபொழுதே காலமாகச் செய்வது, எ-று. 179

மேல்நோக்கு முகடு கீழ்நோக்குநாள்.

மாமுதல்நான்குமற்றை மகமுதல்நான்குமூலந்
தான்முதல்நான்குமேலாந் தக்கமான்றலையவிட்டம்
மேவுசித்திரையுமுச்சி விதித்திடுஞ்செங்கைநான்கும்
தாவியசோதிநான்குஞ் சதையமுங்கீழாங்காலே.

இ-ள். அசுவதி முதல்நாலும், மகமுதல் நாலும், மூலம் முதல் நாலும், இவை மேல்நோக்கினநாள் இவை யீற்றில் அகமெடுக்கவும் கூடம் வைக்கவும் ஊரேற்றவும் நன்றென்பது மிருகசீரிடம், அவிட்டம், சித்திரை இவை மூன்று முகட்டு நாவும் இவை யீற்றில் மகரம் வைக்கவும் கோபுரம் பண்ணவும் நன்றென்பது திருவாதிரை முதல் நாலும் சோதி முதல் நாலும் சவையம் முதல் நாலும் இவை கீழ்நோக்கினநாள் இவை யீற்றில் ஏரி குளம் கிணறு கெல்லவும் நன்றென்பது, எ-று. 180

காரிய சுத்தி.

கால்கொண்டமணத்துக்கேழுங்கருதும்வாயுறைக்கிரண்டும்
மால்கொண்டமனைக்குநான்கும் வழிபோக்குக்கீரைந்துவாஸ்து
மேல்கொண்டபிரதிட்டைக்காது மியிர்வித்தைமுடிசீமந்தம்
மேல்கொண்டநாமமுன்றூற் கெட்டிடஞ்சுத்தமன்றே.

இ-ள். விவாகத்திற்கு ஏழாமிடமும், அன்னப்பிராசனத்துக்கிரண்டாமிடமும், கிரகாரம்பத்துக்கு நான்காமிடமும், யாத்திரைக்கு பத்தாமிடமும், சுத்திகொள்ளுவது, வாஸ்து பிரதிஷ்டை கருணர்வேதம் சவுளம் வித்தியாரம்பம், அபிஷேகம் சீமந்தம்நாமகரணம் உபநயனம் இவை யீற்றுக்கு எட்டாமிடம் சுத்தமாகக் கொள்வது, எ-று. 181

இராச சுத்தி.

சுத்தமாமனைஞ்சிரார்த்தம் யாத்திரைசோலைவைத்தல்
புத்திசேர்குருவைக்காண்டல் புணர்ந்திடலகமெடுத்தல்

வைத்தபேருழவுகூவல் மாக்கலமயிரோகல்வி
கத்தியேயடாதிகயவீருயக் கழித்தாற்கற்ேருர்.

இ-ள். விவாகத்திற்கு மேடமும், சிராத்தத்துக்கு ரிஷபமும், யாத்திரைக்கு மிதுனமும், விருட்சம் வைக்கக் கடகமும், ஆசாரியனைக் காணச் சிங்கமும், புணர்ச்சிக்குக் கன்னியும், அகமெடுக்கத் துலாமும், உழவுக்கு விருச்சிகமும், கிணறுவெட்டத் தனுசும், மரக்கல யாத்திரைக்கு மகரமும், க்ஷவரத்துக்குக் கும்பம், வித்தியாரம்பத்துக்கு மீனமுமாகாது, இவை விலக்கப்பட்ட விராசிகள், எ-று. 182

சென்மத்திரையநாள் தோஷமும் அனுகூலமும்.

கற்புநாள்மூன்றிலெண்ணெய் கடிமணஞ்சிராத்தம்போக்கு
வற்புறுபிணிமருந்து மயிர்வினைமருவலாகா
விற்புகலுழுதல்வித்த லினிதுண்டலறங்கள்செய்தல்
பொற்பணிமகுடமாடை புனையெலாம்புகலின்மாதே.

இ-ள். பிறந்தநாள் மூன்றில் எண்ணெய் வார்க்க விவாகம் சிராத்தம் யாத்திரை வியாதி மருந்து க்ஷவரம் இவை விசேஷித்துத் தவிர்க்கப்பட்டன. குடிப்புக உழவு விதை விதைக்க நவபோசனம் பண்ண தருமஞ்செய்ய ஆபரணம்பூண அபிஷேகம்பண்ண கோடி புடவையெடுக்க இவை விசேஷித்து நன்மை, எ-று. 183

மணப்பொருத்தம்.

மாதவர்மணப்பொருத்தம் வழுத்துநாட்கணப்பொருத்தம்
மாதுமாகேந்திரமோடு ஸ்திரீதீர்க்கம்யோனிராசி
மேதகுமதிபதிக்கோள் வசியமிரச்சுவேதன்
நீதருமரங்கள்புல்லு தெரிந்திடவுரைப்பமேதனே.

இ-ள். தினம் கணம் கேந்திரம் ஸ்திரீ தீர்க்கம் யோனி ராசியாதிபதிவசியம் இரச்சுவம், வேதையென்று சொல்லப்பட்ட தசப்பொருத்தமும் அடைவேன், எ-று. 184

உரைத்திலிரண்டுநான்கா ரெட்டொன்பானீராறிரேழ்
பரித்தவென்னிரண்டு பத்தொன்பானிருபத்திரண்டும்
இருத்தியவிருபன்மூன்று மிருபத்தாறிருபத்தெட்டும்
பொருத்தநன்றிருபத்தொன்பா னனிவைபூவின்தாமே.

இ-ள். உ-ரு-எ-அ-கூ-கஉ-கரு-கஎ-கஅ-உஉ-உரு-உசு-உஅ-உகூ-ம் நாள் இவை யெல்லாக் கன்மங்களுக்கும் பொருந்தும் நாளென்பது, இவை பத்துச் சென்றால் தொட்டெண்ணிக் கொள்வது இருபதானாலும் தொட்டெண்ணுவது, எ-று. 185

மான்றலைபுநற்றமாரல் வயப்பரிசதையமாடி
யான்றறித்திரைபங்குனி யனுடமத்தியம்பாசெங்கை
பூன்றியவறிவன்றோணி மகம்பூசமோணமத்தந்
தோன்றினன்னொருநாளல்லா தொழித்தனர்துணிந்துதேர்ந்தோர்

இ-ள். மிருகசீரிடம் புநர்பூசம் கார்த்திகை அசுவதி சதையம் உத்திராடம் சித்திரை உத்திரம் அனுஷம் இவை யொன்பதும் ஸ்திரீயும் புருஷனும் ஒருநாளாகில் மத்திமம் ரோகணி திருவாதிரை உத்திரட்டாதி ரேவதி மகம் பூசம் திருவோணம் அத்தம் இவை யெட்டும் ஒருநாளாகில் உத்தமம் மூலம் ஆயிலியம் விசாகம் கேட்டை பூரமூன்றும் பரணி அவிட்டம் சோதி இவை பத்து நட்சத்திரங்களும், இருவருடையதும் ஏகநட்சத்திரமாகிலாகாது, எ-று. 186

கணப்பொருத்தம்.

தேரடுப்புத்திரங்கள் செங்கைமுப்பூரமக்கள்
பாரமான்றலைபூசங்கள் பனைவிளக்கோணந்தோணி
மூரிமாவத்துந்தேவர் முறங்கேட்டைப்பயறுமூலம்
மாரல்பாம்பவிட்டஞ்செக்கு மசங்கணமரக்காரங்கே.

இ-ள். உரோகணி பரணி உத்திரத்திரயம் திருவாதிரை முப்பூரம் இவை கூ-ம் மனுஷகணம் மிருகசீரிடம் புர்பூசம் பூசம் அனுஷம் சோதி திருவோணம் இரேவதி அசுவதி அத்தம் இவை யொன்பதும் தேவகணம் விசாகம் கேட்டை சித்திரை மூலம் கார்த்திகை ஆயிலியம் அவிட்டம் சதையம் மகம் இவை யொன்பதும் இராட்சதகணம், எ-று. 187

அரக்கருந்தேவர்தாமு மலைப்பகையாக்கரோடே
பெருக்கவுமனிதர்சேரிற் பிணம்படுமக்களோடே
செருக்கியதேவர்சேரின் மத்திமஞ்செல்வமுண்டா
மிருக்குமேற்கணங்களொன்றே யிவைநலமாதுமொன்றே.

இ-ள். இராட்சத கணமும் தேவகணமுமாகில் சிலுகு ராட்சதகணமும் மனிதகணமுமாகில் மரணம் மனுஷகணமும் தேவகணமுமாகில் மத்திமம் இரண்டு மொருகணமாகில் உத்தமம், எ-று. 188

மாகேந்திரமும் ஸ்திரி தீர்க்கமும்.

ஒன்றுநான்கேழுபத்துப் பதின்மூன்றெண்ணிரண்டாநாட்க
ளொன்றொழித்திருபானையந் திருபதோரிரண்டொாகில்
நன்றுமாகேந்திரந்தான் நாட்பதின்மூன்றப்பாலே
சென்றிடின்மிகவுநன்று ஸ்திரிதீர்க்கமென்றுசெப்பே.

இ-ள். ௧-௪-௭-௧0-௧௩-௧௬-௧௯-௨௫-௨௨ - இந்நாளும் மகேந்திரப் பொருத்தமுண்டென்பது (முன்புபோல தொட்டெண்ணுது யிருபத்தேழுங் கண்டுகொள்வது) மாகேந்திரம் (ஸ்திரி தீர்க்கங் கொள்ளும்படி) ஸ்திரீநாளிலே நின்று புருஷநாளளவு மெண்ணினால் ௧௩-நாளுக்கு மேற்படில் உத்தமம் பதின்மூன்றில் குறைவதாகாதென்று சொல்லுவர், எ-று.

யோனிப் பொருத்தம்.

செப்பியகுதிரையானை யாடுநீய்நாகஞ்சாரை
தப்பிற்பெண்ணாய்பெண்பூனை தகர்புஞ்ஞைபெலியாண்பெட்டை
யொப்பொருதெருமைவேங்கை கிடாப்புலியோடுபுல்வாய்
கொப்பிறுகலைநாய்வல்லாண் குரங்கவன்பசுக்குரங்கே.

இ-ள். அசுவதி ஆண்குதிரை பரணி ஆண் யானை கார்த்திகை பெண்ணாடு உரோகணி நாகப்பாம்பு மிருகசீரிடம் சாரைப்பாம்பு திருவாதிரை பெண்ணாய் புனர்பூசம் பெண்பூனை பூசம் ஆணாடு ஆயிலியம் கடுவன்பூனை மகம் ஆணெலி பூரம் பெண்ணெலி உத்திரம் எருது அத்தம் பெண் எருமை சித்திரை ஆண்புலி சோதி ஆண் எருமை விசாகம் பெண்புலி அனுஷம் பெண்மான் சேட்டை ஆண்மான் மூலம் ஆண்நாய் பூராடம் ஆண் குரங்கு உத்திராடம் மலட்டுப்பசு திருவோணம் பெண்குரங்கு, எ-று.

குரங்குமனையிற்பெண்டீர் குதிரையிற்பேடுகூறில்
நரர்களிற்புருஷர்நல்லர் பாற்பசுமிடிமீராக
விருபதோடேழுநாளும் யோனியிப்பரிசேயென்று
துரகமேயாதியாகச் சொல்லிடாய்துடியேயன்னாய்

இ-ள். அவிட்டம் பெண் சதையம் பெண்குதிரை பூரட்டாதி புருஷன் உத்திரட்டாதி பாற்பசு இரேவதி பெண்யானை இவ்வகையால் இருபத்தேழு யோனியும் அசுவதி முதலாகக் கண்டுகொள்க, எ-று.

துடிபிடியானைதன்னிற் பகைநரர்நாகங்கோக்கள்
கடிபுடைபெருமைபுல்வாய் கடாப்புலிபகையதாகும்

கொடியபாம் பதனுக்காடு குரங்குக்குநாயதாகுங்
சுடியவேபெலிக்குப்பூனை பகையெனக்கருதுநீயே.

இ-ள். ஆனைக்குப்பகை மனிதர் குதிரைக்குப்பகை பசு எருமைக்கும் மானுக்கும் கிடாவுக்கும் பகை புலி பாம்புக்குப் பகை ஆடு குரங்குக்குப் பகை நாய் எலிக்குப் பகை பூனை, எ-று. 192

கருத்துடையானுமாணுங் கடும்பகைபெண்ணும்பெண்ணுந்
திருத்தமாம்பெண்பெண்ணுறி யாணுமேனற்செல்வமுண்டாம்
விருத்தமாம்பெண்ணுணுறி யாண்பெண்மேனல்மிகவும்யோனிப்
பொருத்தமாமியேழில் மேற்படிபுகழுண்டாமே.

இ-ள். இரண்டுயோனியும் புருஷயோனியாகில் உயித்திய முண்டாம் இரண்டு யோனியும் பெண்யோனியாகில் உத்தமம் ஸ்திரீயோனியாய் புருஷன் புருஷயோனியாகில் நன்றென்பது புருஷன் ஸ்திரீயோனியாய் ஸ்திரீ புருஷயோனியாகில் மறுதலை யுண்டாம் இவ்வகையால் யோனிப் பொருத்தம் பார்ப்பது இராசிப் பொருத்தம் கொள்ளும்படி. ஸ்திரீராசியில் நின்று புருஷராசி யளவு மெண்ணினால் ஏழாமிராசியாகிலும் ஏழுக்கு மேற்படிலும் உத்தமம் ஏழிற் குறையலாகாது, எ-று. 193

இராசி அதிபதிப் பொருத்தம்.

உண்டாயமறிக்குங்கேட்கு முறவுமாண்விடையாழ்கோல்பெண்
குண்டைகோக்குறவிலை கொடியதோளாதியாறுந்
தண்டுபெண்டனக்குச்சிங்க மீனொழித்தெல்லாஞ்சார்வாம்
நண்டுக்குவிடையாழ்வில்மீ னரிகட்பென்றுசொல்லே.

இ-ள். முன்பே கட்டுச்சொல்லியிருக்கவும் விசேஷித்து அதிபதிப் பொருத்தஞ் சொல்லும்படி. மேஷம் விருச்சிகத்துக் குறவு மகரம் ரிஷபம் மிதுனம் துலாம் கன்னி இவ்வைந்துமென்பது ரிஷப துலாத்துக் குறவு மிதுனம் விருச்சிகமுதல் ஆறுராசியாம் மிதுனத்துக்கும் கன்னிக்கு முறவு சிங்கமு மீனமுமொழிய மற்றெல்லா ராசியுமென்பது கடகத்துக்கு ரிஷபமும் மிதுனமும் தனுசும் மீனமும் கன்னியுமுறவு எ-று. 194

சொல்லியசிங்கத்துக்குச் சுற்றமீன்மேடமாகும்
வில்லுமீன்றனக்குக்கும்பம் விடைமுதலாறுநட்பாந்

கொல்லிமான்கும்பத்துக்குக்கோதையாழ்விடைமீன்விற்கோ
லல்லல்மாகுழலாய்கேண்மீ னதிபதிப்பொருத்தமாங்கே.

இ-ள். சிங்கத்துக் குறைவு மீனம் மேஷம் தனுசுக்கும் மீனத்துக் கும்பம் ரிஷபமுதலாறு ராசியு முறைமை மகர கும்பத்துக்குக் கன்னி மிதுனம் ரிஷபம் மீனம் தனுசு துலாமுறை வென்பது.

இராசிவசியம்.

பொருந்திடுமறிக்குச்சிங்கம் விருச்சிகம்பொருவிடைக்கு
விருந்துநற்கடகங்கோலா மிதுனத்துக்கரிவையாகுந்
திருந்திகற்கடகத்துக்குத் தேட்சிலைசிங்கத்துக்குக்
கருஞ்சுறுவசியமாகுங் கன்னிக்குவிடைமுன்பொன்னே.

இ-ள். மேடத்துக்குச் சிங்கமும் விருச்சிகமும் ரிஷபத்துக்கு கடகமும் துலாமும் மிதுனத்துக்குக் கன்னியும், கடகத்துக்கு விருச்சிகமும் தனுசும், சிங்கத்துக்கு மகரமும் கன்னிக்கு, ரிஷபமும் மீனமும் வசியமென்றது, எ-று. 196

பொன்னாய்துலைக்குப்புல்லாய்பொருந்துதேளதற்குநண்டாங்
கன்னியம்வசியமாகுங் கார்முகமதற்குமீனாஞ்
சொன்னவில்கரத்துக்குக் கும்பமாம்கும்பத்துக்கு
மன்னுமீன்மீனத்துக்கு மகரமும்வசியந்தானே.

இ-ள். துலாத்துக்கு மகரமும் விருச்சிகத்துக்குக் கடகமும் கன்னியும், தனுசுக்கு மீனமும் மகரத்துக்குக் கும்பமும் கும்பத்துக்கு மீனமும் மீனத்துக்கு மகரமும் வசியம், எ-று. 197

றச்சுப்பொருத்தம்.

வைச்சான்மதியிற்பாதி போல்மூன்றுவரையைக்கீறி
மெய்ச்செய்தவரையின்மேலே விலங்குநால்வரையுங்கீறி
யச்சுவினிமுதலாய்வைத் துயிர்ச்சுவைபடைவேவெண்ணி
யுச்சிடவிருவர்நாளு மொருவரையுமேற்கேடே.

இ-ள். ஒத்தநிலத்திலே சந்திரன் பாதிபோலே மூன்று வரையைக் கீறியதிலே குறுக்கே நாலுவரையுங்கீறிய அது இருபத்தேழு வரையுமாகில் முதல்வரையிலே அசுவதியை நாட்டி இருபத்தேழு நாளையுமெண்ணுவது எண்ணிச்சென்றால் ஸ்திரீநாளும் புருஷனாளும் ஒருவரையிலு மாகாதென்பது, எ-று. மேலும் சிறப்பித்தது அதனால் அசுபதியும் ஆயிலியமும் மகமுங் கேட்டையும் மூலமும் ரேவதியும் இந்த ஆறுநாளும் அடிக்கயிரொன்றும், பரணி

பூசம் பூரம் அனுடம் பூராடம் உத்திரட்டாதி இவையாறுங் குறங்கிற் கயிறென்றும், கார்த்திகை புனர்பூசம் உத்திரம் விசாகம் உத்திராடம் பூரட்டாதி இவை ஆறும் வயிறென்றும், ரோகணி திருவாதிரை அத்தம் சோதி திருவோணம் சதையம் இவை ஆறும் கழுத்தென்றும், மிருகசீரிடம் சித்திரை அவிட்டம் இம்மூன்றும் சிரசென்றும் பெயராம் இவை யெல்லாந் தம்மிற் பொருந்தாது.

உறங்கயிரடியதாகி லொண்பொருட்கேடதாகும்
குறங்கினிற்கயிறதாகினிற் கூறுகமலடியென்றுந்
திறந்தரும்வயிறதாகி னிச்சயமக்கள்சாவாம்
சிறந்தவான்கழுத்ததாகிற்கொழுநன் சாஞ்சிரத்திற்பெண்சாம்

இ-ள். அடிக்கயிறால் பொருள் நாசமாகும் குறங்காகில் மலடாகும் வயிறாகில் புத்திர நாசமாகும் கழுத்தாகில் பத்தா மரணமாம் முகடாகிற் பெண் சாகும் இவ்வகையால் ரச்சுகண்டுகொள்க.

ரச்சுக் கயறு.

| மிருகசீரிடம். | | சித்திரை. | | அவிட்டம் | |
|---|---|---|---|---|---|
| ரோ | திருவ | அஸ் | சுவா | திரு | சதைய |
| கிருத் | புனர்பூ | உத் | விசா | உத் | பூரட் |
| பரணி | பூசம் | பூரம் | அனு | பூரா | உத்திர |
| அசு | ஆயிலி | மகம் | கேட் | மூல | ரேவதி |

வேதைப் பொருத்தம்.

சாந்தமுச்சதிமாகத் தலத்தினிற்சீறியத்தி
சாய்ந்தமூன்றன்குங்கீறி யமையந்தவேதக்கயிற்றிற்
சேந்தமாமூலவைத்துத் தெரிந்தெண்ணத் தெரிவைநாளு
மாந்தநாட்டாணுமேக வரையுரின்மணந்துகாணே.

இ-ள். ஒத்தநிலத்திலே முச்சதிரமாகக்கீறி இதின்மேலே மூன்
றுன்கு வரையுங் கீறிய வேதக்கயிற்றில் இருபத்தூனாலும் மூன்று
மூலையுமாக இருபத்தேழுங் கண்டு அதில் அசுவதியை ஒருமூலை
யிலேநாட்டி ரேவதி யீறுகவெண்ணினுல் இருவர்நாளு மொருவ
ரையி லுறலாகாது மேலும் சிறப்பித்தது அதனுல் அசுவதி மகம்
மூலம் இவை தம்மிற் பொருந்தாதென்க பரணிக்குக் கேட்டை
பகை கார்த்திகைக்கு அனுஷம் ரோகணிக்கு விசாகம் மிருகசீரி
டத்துக்கு சோதி திருவாதிரைக்கு அவிட்டம் புநர்பூசத்துக்குத்
திருவோணம் பூசத்துக்கு உத்திராடம் ஆயிலியத்துக்குப் பூராடம்
பூரத்துக்கு ரேவதி உத்திரத்துக்கு உத்திரட்டாதி அத்தத்துக்குப்
பூரட்டாதி சித்திரைக்குச் சதையம் பகை ஆதலால் பொருந்தாது
இச்சொன்ன நாட்களொழிய மற்றுள்ள நாட்களெல்லாம் பொருந்
தும், எ-று. 200



# வேதக்கயிறு.

மகம்.

ஆயிலியம்
பூசம்
புனர்பூசம்
திருவாதிரை

பூரம்
உத்திரம்
அஸ்தம்
சித்திரை

மிருகசீரிடம்
ரோகணி
கிருத்திகை
பரணி
அசுவனி

சுவாதி
விசாகம்
அனுடம்
கேட்டை
மூலம்

ரேவதி
உத்திரட்டாதி
பூரட்டாதி
சதயம்

அவிட்டம்
திருவோணம்
உத்திராடம்
பூராடம்

## விருக்ஷப் பொருத்தம்.

காஞ்சிரம்நெல்லியத்தி நாவிற்றிண் கருங்காலிப்பின்
நாஞ்செண்பகமேபுன்னை யால்வாகையரசுவெள்ளி
தீஞ்சுளைப்பலாவெருக்கு மாதளைசிறந்தவில்வம்
பூஞ்சனைமருதுதாழை மகிழ்மூங்கிற்பொழிற்றேமாவே.

இ-ள். அசுவதி காஞ்சிரம் பரணி நெல்லி கார்த்திகை அத்தி ரோகணி நாவல் மிருகசீரிடம் கருங்காலி திருவாதிரை செண்பகம் புநர்பூசம் புன்னை பூசம் ஆல் ஆயிலியம் வாகை மகம் அரசு பூரம் விளா உத்திரம் பலா அத்தம் எருக்கு சித்திரை மாதளை சோதி வில்வம் விசாகம் மருது அனுஷம் தாழை கேட்டை மகிழ் மூலம் மூங்கில் பூராடம் தேமா, எ-று. 201

பொழில்வஞ்சிபலாசுவன்னி மாப்புளிவேம்பிலுப்பை
பழுதின்றிப்பறிமுண் காணப் பால்மரம்பலாசுபுன்னை
எழுசம்புப்புகழ்பலாமாவி லுப்பைசெண்பகமெருக்குங்
கிழவஞ்சியரசாலத்தி மாதளைவயிரமற்றே.

இ-ள் உத்திராடம் வஞ்சி திருவோணம் பலாசு அவிட்டம் வன்னி சதையம் மராமரம் பூரட்டாதி புளி உத்திரட்டாதி வேம்பு ரேவதி இலுப்பை இப்படி யிருபத்தேழுநாளுங் கண்டுகொள்க, இவையிற்றில் பலாசு புன்னை நாவல் மகில்பலாமா இலுப்பை செண்பகம் எருக்குவஞ்சு அரசு ஆல் அத்தி மாதளை இவைகளை பால் மரம் அல்லாதவையெல்லாம் வயிரம், எ-று. 202

வயிரமாணாகிப்பெண்பால் மரமெனின்மைந்தருண்டாம்
வயிரமாதரிவையாகி லாம்பலன்மலடியாகும்
வயிரவதிரண்டுமாகின் மைந்தரும்பொருளுவாயின்
விவரமதொழிந்திரண்டு பாலெனின்வாழ்வுண்டாமே.

இ-ள். புருஷன் வயிரமாய் பெண்பால் மரமாகில் புத்திருண்டாம் பெண்வயிரமாய் புருஷன் பால் மரமாகில் மலடாவர் இருவரும் வயிரமாகில்புத்திரசேதமும் அர்த்தசேதமும் இருவர் நாளும் பால்மரமாகில் இலட்சுமிகடாட்சமுண்டாம் எ-று. 203

பட்சிப்பொருத்தம்.

வாழ்பரிமுதலாயைந்தும் வல்லூராதிரைமுன்றுஞ்
சூழ்வலியாங்கையாகுந் தய்யவுத்திரமுன்னைந்துந்
தாழ்விலாவலியனாகுந் தடம்பனைமுதலாயைந்துங்
கோழியாமோணமாகி யாறுமாமயிலின்கூறே.

இ-ள். அசுவதிமுதல் ஐந்துநாளும்வல்லூரு திருவாதிரைமுதலாறுநாளும் ஆந்தை உத்திரமுதலைந்து நாளும்வலியன் அனுடமுதலைந்துநாளும் கோழி, திருவோணமுதலாறு நாளும்மயில் எ-று.

பட்சிப்பகை.

மயிற்பகைவல்லூராந்தை கோழிக்குமவையேயாகுஞ்
செயிற்பகைவலியற்காந்தை யாந்தைக்குவலியன்றீதாம்
இயற்றியவலியநல்லா தெல்லாம்வல்லூரினுக்கே
யுயிர்ப்பகையல்லான்மற்றுங் கொழிந்தவையுறவாமன்றே.

இ-ள். மயிலுக்குவல்லூரும் ஆந்தையும்பகைகோழிக்குவல்லூரும் ஆந்தையும்பகைவலியனுக்கு ஆந்தைபகை ஆந்தைக்குவலியன் பகை, வலியன்பகை, வல்லூருக்குவலியனொழியவெல்லாதவையெல்லாமுறவு (இவைஉயிர்ப்பகை) எ-று. 205

ஸ்திரிதீர்க்கம்-புருஷதீர்க்கம்.

அன்றுபெண்பிறந்தநாள்தொட் டானுநாளளவுமெண்ணி
நின்றவந்நாட்கள்தொட்டு நேரிழைநாளீறாகச்
சென்றதையேழிற்றாக்கி யிருபத்தேழ்க்கீய்ந்தசேட
மன்றலங்குழலாய்தாழ்ந்தோர் மரணம்பின்முன்னென்மன்றே

இ-ள். பெண்பிறந்தநாளிலேநின்று ஆண்பிறந்தநாளளவுமெண்ணிஇதனையேழிற்பெருக்கிஇருபத்தேழுக்கீய்ந்துசேடத்தையறிந்துதாழ்வுள்ள நாள்பிந்தமரணம்முன்புசொன்ன பொருத்தமெல்லாம் ஸ்திரீபிறந்தநாளிலே தொட்டென்பது எ-று. 206

அங்குரார்ப்பணம்.

மன்னியமுளைக்குங்காலம்வரையின்றிமணஞ்செய்நாளில்
முன்னிலைந்தாளாகமொழிந்தனரொழிந்தபின்னாள்
தன்னையுமுறைத்தாரென்றுசாற்றுவர்நோன்புதானு
முன்னை தான்வரைந்தவிந்தமூன்றுநாளைந்துமாமே.

இ-ள். அங்குரார்ப்பணத்துக்கு திதிவாரநட்சத்திரங்கள் பார்க்கவேண்டியதில்லைவிவாகத்துக்கு யிட்டநாளுக்குமுன்பிலைந்தாநாள் மூன்றுநான்கொள்வது ஆதில்முடியதாகிலன்றுகொள்வது உபனயனத்துக்கும் சீமந்தத்துக்கும் முன்னே மூன்றுநாளைந்துநாளென்ன அங்குரார்ப்பணம் பண்ணுவது எ-று. 207

நட்சத்திர தெவதை.

அஞ்சொல்பாரதிதுர்க்கையங்கியயன்றிங்கள்
அரணமார்பொன்னுகப்பிருகாத்தின்றூயும்
மிஞ்சரிமாவாருக்கன்விஸ்கர்மன்சோதி
வேலன்வாயுவலாரியவுணர்புனல்வேந்தன்
கஞ்சமலர்க்கணபதியால்சசிகாலநிதிமன்
றேனுமுதற்சனியாகக்கடவுளெனக்கொண்டங்
கெஞ்சலிலைப்பசிமுதனுளிருபத்தேழு
மிவ்வடைவேவபயராகவெண்ணிக்கொள்ளே.

இ-ள். அசுபதிக்குச்சரஸ்வதி, பரணிக்கு-துர்க்கை, கார்த்திகைக்கு அக்கினி, ரோகணிக்குப்பிரமன் மிருகசீரிடத்துக்குச்சந்திரன்திருவாதிரைக்கு ஈச்சுரன் புநர்பூசத்துக்குதேவர்கள் பூசத்துக்கு

வியாழம் ஆயிலியத்துக்கு ஆதிசேடன் மகத்துக்குச்சுக்கிரன் பூரத்துக்கு தேவர்கள் பூசத்துக்குவியாழம்ஆயிலியத்துக்கு ஆதிசேடன் மகத்துக்குச்சுக்கிரன் பூரத்துக்குபார்வதி உத்திரத்துக்குசாத்தான் அத்தத்துக்குச்சூரியன் சித்திரைக்குவிஸ்வகர்மா சோதிக்குலட்சுமி விசாகத்துக்குச்சுப்பிரமணியர் அனுடத்துக்கு வாயுபேட்டைக்குத் தேவேந்திரன் மூலத்துக்கு அசுரர் பூராடத்துக்கு வருணன் உத்திராடத்திற்கு விக்கினேஸ்வரன் திருவோணத்துக்கு விட்டுணு அவிட்டத்துக்கு இந்திராணி சதையத்துக்கு இயமன் பூரட்டாதிக்கு குபேரன் உத்திரட்டாதிக்கு காமதேனுரேவதிக்குச் சனிபகவான் இவைகள் அசுபதிமுதலான இருபத்தேழுநாட்களுக்குந் தேவதைகளென்றறிக

திதிதேவதையும் உவாச்சூழ்ந்தகரணமுஞ்சொல்லியது.

எண்ணிமயன மாலியமணிந்துகந்த
　னிந்திரன்சீர்வசுக்கள்ராத்தருமனீசன்
விண்ணில்வெயில்வேள்கசுமுனிந்ததேவர்
　மெய்த்தேவர் திதித்தேவர்விளம்புங்காலை
கண்ணார்பிரசாபதிசந்திரன் சயந்தனவன்வசுக்கள்
　கனமணிபத்திரணியமனிவர்காணதேவ
ரொண்ணுதலாயியமனிடன்பிதிர்க்களராவீச
　ருவாச்சூழ்ந்தகரணத்துக்கிறைவரெனவுரையே

இ-ள். பிர்மா விஷ்ணு யமன் சந்திரன் சுப்பிரமணியன் இந்திரன் வசுக்கள் சர்பம் தருமன் உருத்திரன் ஆதித்தன் காமன் கலிபிதுர்க்கள் விசுவதேவர் இருவர்கள் பிரதமைமுதலாக திதிதேவதை யென்றறிவது விஷ்ணு பிரசாபதி சந்திரன் சயந்தன் வசுக்கள் மணி பத்திரன் யமன் இவர்கள் சிங்கமுதல்காணதேவதை யென்றறிவது இயமன் பிதுர்கள்சற்பம் உருத்திரன் இவர்கள் உவாச்சூழ்ந்தகரண தேவதைகள் எ-று. 208

ஆண் பெண் அலிநட்சத்திரமறிக-

உரைக்கிலத்தமிசமேகணம்பிசித்தோ
　டொன்னையுத்திரட்டாதி பூரட்டாதி

தெரித்தபரியாணிலிங்கமூலஞ்செக்குச்
சிறந்தமான்றலைமூன்றுந்தெளியுமலியென்க
வருட்பரணிமுதல் மூன்றுமாயில்முதல்நான்கு
மாதிரைசித்திரையாதிமூன்றவிட்டன்தோணி
வருத்தமிலபூராட முத்திராடங்கேட்டை
மற்றவைபெணிலிங்கமெனவழுத்துமாதே.

இ-ள். அத்தம் புநர்பூசம் பூசம் திருவோணம் அபிசித்து அனுஷம் உத்திரட்டாதி பூரட்டாதி அசுவதி இவை யொன்பதுநாளும் புருஷ நட்சத்திரம் மூலம் சதையம் மிருகசீரிடம் இவை மூன்றும் நபஞ்சகம் பரணி கார்த்திகை ரோகணி ஆயிலியம் மகம் பூரம் உத்திரம் திருவாதிரை சித்திரை சோதி விசாகம் அவிட்டம் ரேவதி பூராடம் உத்திராடம் கேட்டை இவை கரு நாளும் பெண்ணிலிங்கமென்றறிவது, எ-று. 220

தெருக்ஷி நட்சத்திரபலன்.

மாவிதவையாம்பரணிமைந்தருண்டா
மடிகார்த்திகைநன்மையுரோகணிமகசிரத்தில்
மேவுகொழுநற்கினியள்செங்கைவெப்பு
மிகுபுநர்தஞ்சுகம்பூசம்விளங்கியநற்சீராம்
பூவாயில்வயிறிழவுமகங்கணவனல்லன்
பூரமகவில்லைப்பயனுண்சித்திரத்திற்
றேவிநலம்பெரியளத்தஞ்சித்திரைநல்லறிவாந்
தீபத்திற்குடும்பிமுறம்விதவையெனத்தெருண்டால்.

இ-ள். அசுபதி திறண்டால் விதவை பரணிபுத்திரருண்டாம் கார்த்திகை மடி ரோகணி நன்மையுண்டாம் மிருகசீரிஷம் பத்தாவுக்கினியள் திருவாதிரை வெம்மை புநர்பூசம் சுகம் பூசம் சீருடையாள் ஆயிலியம் வயிறிழிவு மகம் பத்தானல்லாவன் பூரம் புத்திரகானி உத்திரம் பிரயோசனமூண்டு அத்தம் நன்மை சித்திரை நல்ல அறிவு சோதி குடும்பி விசாகம் விதவை, எ-று. 221

பல்கதிரோன்வாக மாவில்லைதிங்கள்
பத்தினியாஞ்சேய்விதவை பல்சிறுவர்புதற்குச்
செல்வமிகுங் குருவெள்ளி யழகுமிடிகாரி
தெருண்டவர் தம்பலந் தன்னைத்தெரிந்துரைக்குங்காலே.

இ-ள் மேஷம் உதயத்தில் இரண்டால் பாஸ்திரீயாம் ரிஷபம் கன்னி மிதுனம் சோரமுண்டாம் கடகம்-துட்டை-சிங்கம் கன்னி கிதியுண்டாம் துலாம்மிடி விருச்சிகம்-பாத்தை-தனுசு-கன்னிமகரம் கற்புடையவள்கும்பம் அர்த்தமுண்டாம் மீனம் தீதுண்டாம் வாரத்தில் ஞாயிறு புத்திரரில்லை திங்கள் பதிவிரதை செவ்வாய் விதவை புதன் புத்திரருண்டாம் வியாழம் தனமுண்டாம்வெள்ளி அழகுண்டாம் சனி மிடிபடும்-எ-று. 214

கிரகநோக்கு.

சேருமுதைய மேழிடங்கள் முழுநோக்கென்பான் றிகழ்முக்காற்
பாரிலைந்து மறைநேக்காம் பத்துநான் குங்கால்நோக்கா
மாறில்மூன்று பன்னொன்று மறைக்கால் நோக்கமாறெட்டும்
நாரியிரண்டும் பன்னிரண்டு நயனமில்லை நவக்கோளே.

இ-ள். உதையராசியும் எ-ம் ராசியும் முழு நோக்கு கூ-ம் ராசி முக்கால் நோக்கு ரு-ம் ராசி அரைநோக்கு கச-ம் கால் நோக்கு சகக-அரைக்கால் நோக்கு உ கூ அ கஉ நோக்கில்லை யென்பது இவை யெல்லாம் தந்தமாட்சி நிலங்களில் நின்றபோது இதிற் சொன்ன நோக்கு முழுபலம் நட்பில் நின்றபோது சொன்ன இவை யீற்றில் நாலிலொன்று குறையும் உச்சத்தில் பத்திலொன்று ஏழும் பகையில் ஒன்றுபாதி நீச்சத்தில் ஒன்றுகால் இவ்வகையெல்லாம் நோக்கென்க-எ-று. 215

ஜாதகம்.

நவையிற் குழவிபிறந்திடினு நன்மைதீமை நாடுங்கா
லவமிக்கருப்ப முதலாக வாராய்ந்தறிகவறியாயேற்
பவனிதன்னிற் சிரோதைய முதல்க்கொள்களவுதையமுயிர்
தவரில்மதி சேரோடையுடல் தாமக்கூந்தன் மாமயிலே.

இ-ள். செனித்தவர்களுக்கெல்லாம் நன்மைதீமை விசாரிக்குமிடத்து கெற்பதான முகூர்த்தமாகக் கொள்வது கொள்ளமுடியாதாகில் சிரோதைய மானபோது முகூர்த்தமாகக்கொள்வது பிறந்தபோது உதிக்கின்ற விராசியுயிரென்றும் ஜென்மலக்கின மென்றும் அறிவது சந்திரனின்ற விராசியை உடலென்றும் சந்திரலக்கினமென்றும் அறிவது-எ-று. 216

மாமன்சிறுவன் றாய்தந்தைதமராமைந்து மீரைந்தும்
பூமன் காரிமதிவெய்யோனிற் கிற்புகட்கோள் நோக்கிலவே
சோமற்கேழ் சேய்சனிநிற்கிற்றாய்ஞ் சுடற்கேள் பிதாமரணந்
தீமைகோட்களுடலுயிரைப்பற்றிநிற்கிற்சிறுவனசாம்.

இ-ள். உதையமிராசிக்கு ரு-மிடம் ம-மிடத்தில் செவ்வாய் நிற்கில் மாமனுக்கும் சனிநிற்கில் பிள்ளைக்கும் சந்திரனிற்கில் மாதாவுக்கும் சூரியனிற்கில் பிதாவிற்கும் மரணமுண்டென்க சுபக்கிரக நோக்கில்லாமல் சந்திரனுக்கு எ-மிடத்தில் செவ்வாயாதல் சனியாதல் நிற்கில் மாதாமரணம் ஆதித்தனுக்கு எ-மிடத்தில் செவ்வாய் சனி நிற்கில் பிதாமரணமென்பது பாபக்கிரகங்கள் உடலையு முயிரையும் பற்றி நிற்கில் பிள்ளை மரணம் எ-று. 217

சாருமுதையந்தனக்காரிற் காதிராபதற்கேழ்சனி செவ்வாய்
சேரில்மகவும்பிதாவுடன் சாந்திங்களாகிற்று யுடன்சாம்
காரியுதிப்பச்சேய் நான்கிற்கதிரோனேழிற் கலந்திடினும்
பாரில்மகவும் பகற்கிடவாப்பாம் பினுதையமாக்கிடவா.

இ-ள் உதையத்துக்கு ௯-மிடத்தில் ஆதித்தனிற்க ஆதித்தனுக்கு ஏழாமிடத்தில் சனிசெவ்வாய் நிற்கப்பிள்ளையும் பிதாவுமரணம் ௯-மிடத்துச் சந்திரனிற்கத் தாயுடன் மரணம் உதையத்தில் சனிநிற்க ச-மிடத்தில் செவ்வாய் நிற்க ஏழாமிடத்தில் சூரியனிற்க சுபக்கிரகங்கள் நோக்கில்லையாகில் பிள்ளையன்றைப்பகலே மரணமென்மது உதையத்தே ராகு கேதுக்கள் நிற்கப்பிள்ளையன்றிராவே மரணமென்பது எ-று. 218

கிடைத்தயுயிரோடுடல்தருஞன்வாருநாள் தீதேற்கொழுமியகோட்
படைத்தநோக்கமின்றெனினும்பாலன்மரணந்தேயுமதிக்
கடுதவிருப்பாற்றீய்க்கோளேலன்னைபுதல்வனுடன்வீயுந்
தொடுத்தகூடலராத்தீண்டிற்றேன்றுமகவுமரணமன்றே.

இ-ள். சென்மலக்கினத்திலும் சந்திர லக்கினத்திலும் பாபக்கிரகங்கள் நிற்கச் சுபக்கிரகம் பார்த்திருந்தால் பிள்ளை மரணமென்பது அமாபட்சத்துச் சந்திரனுக்கு முன்பின் பாபக்கிரக நிற்கத் தாயும் பிள்ளையுமரணம் ஜெனித்தபொழுது துமாதிப்பஞ்ச கிரகஞ் சூழகிராணந் தீண்டில் பிள்ளையன்றே சாணம்-எ-று. 219

சொன்னபூசஞ்சித்திரைபூராடநாளில்மதிதோன்றிற்
பின்னுழுதற்கால்கேழும்பிதாதாய் பிள்ளைமாமன்சாம்

பன்றென்றென்பான்சனிசேயும்பாம் பொன்பதிலும்பிதாமரணம்
பொன்னோக்காதலெட்டேழிற் புதல்வன்பொன்றுஞ் சநிசெவ்வாய்.

இ-ள். பூசம்சித்திரை பூராடம் இந்நாளில்சந்திரனிற்கமுதற்காலிலே செனிக்கில் பிதாமரணம் இரண்டாங்காலில் மாதா மரணம் மூன்றாங்காலில் பிள்ளைமரணம் நாலாங்காலில் மாமன்மரணமென்பது ௧௧-மிடம் ௯-மிடமாதல் சனிசெவ்வாய் நிற்கினும் ௯-மிடத்துப் பாம்புநிற்கினும் பிதாமரணம் இவையெல்லாம் சுபக்கிரகங்கள் நோக்கிலையாகில் நன்மையில்லை-எ-று. 220

செவ்வாய்மூன்றிலுடன்பிறந்தார் சநிசேய்வெள்ளியேழிற்பிள்ளை
தவ்வாமதியமேழற்றாய்தந்தைமரணங்கதிரேழி
லவ்வாயலவனுதிப்பவதற்காறு மூன்றுதீயக்கோளேல்
மைவார்குழலாயீராறில்நற்கோள்நிற்கில்மகன்போமே.

இ-ள். ௩-மிடத்துச் செவ்வாய் நிற்கி லுடன்பிறந்தார்மரணம் ௭-மிடத்தில் சனிசெவ்வாய் வெள்ளிநிறகில் பிள்ளைமரணம் சந்திரன் ௭-மிடத்தில் நிற்கில் தாய்மரணம் ஆதித்தன் ௭-மிடத்தில் நிற்கில் பிதா மரணம் கடகமுதையமாக ௯-மிடத்திலும் ௯-மிடத்திலும் பார்நிற்க ௧௨-மிடத்தில் சுபக்கிரகம் நிற்கில் பிள்ளைமரணம் எ-று.

மகவினுயிருக்காறேழில்மற்றையெட்டில்முன்னான்கில்
மிகவுந்தேயுமதியுடனேவெங்கோள்நிற்பநற்கோள்கள்
திகழுநோக்கமின்றேனினுந்தேயுமதிக்குநாலெட்டில்
நிகழுந்தீய்க்கோள்நின்றிடினுமெச்சமரணநிச்சயமே.

இ-ள். உதையத்துக்கு ௯ ௭ ௮ ௧௨ மிடத்தில் சீணசந்திரநிற்க அவனுடனே பாபக்கிரகம் நிற்க சுபக்கிரகம் நோக்காதொழியினும் சீணசந்திரனுக்கு ௪-மிடம் ௮-மிடத்தில் பாபக்கிரகம் நிற்கினும் பிள்ளை மரணம்-எ-று. 222

நிச்சமேவுகதிருதையம்நிகழ்பாட்டதனினிலைதிப்ப
வச்சந்திக்கோட் பன்னிரண்டின் மருவின்மரணமகற்கேற்பப்
பச்சைமதியுங் கதிரவனும் பாலனுயிர்க்குப் பன்னிரண்டிற்
கச்சுமுலையாய் நிற்பாரேற் கண்போமென்பலொருகண்போம்

இ-ள். ஆதித்தனுஞ் சந்திரனுங்கூட உதையம்பண்ண அதற்குப் பன்னிரண்டாமிடத்தில் பாபக்கிரகம் நிற்க ஆதித்தனஸ்த

மிக்கச் சந்திர னுதையமாக உதையத்துக்கு கஉ-மிடத்தில் சந்திராதித்தர் நிற்க பிள்ளை யிரண்டு கண்ணுங்கெடும் ஒருவர் நிற்கில் ஒரு கண்கெடும் கஉ-மிடத்தில் நிற்கிறவர்களைச் சனி செவ்வாய் நோக்கிற் கண்கெடும், எ-று. 203

போதுமிராசியிரண்டிணையும் பொன்னுக்கன்றித் தீக்கோட்கள்
சேதமதியமுடனிற்கிற் சிறுவன்குருபுத்திரனல்ல
சாதித்ததிரேல் மறையவர்கோன் சனியேலினர்க்கீழ்ப்பட்டா
ராதிவணிகர்சூத்திரற்சேயாவேற் புலையரவன்றந்தை.

இ-ள். சந்திரலக்கினத்தையும் சென்மலக்கினத்தையும் சுபக்கிரகங்கள் நோக்காதொழியில் சந்திரனுடன் பாபக்கிரகங்கள் சேர பத்தாக்க வின்றொன்று அறியவேண்டில் சந்திரனுடனே ஆதித்த நிற்கில் பிராமணராதல் க்ஷத்திரியராதலென்க, சனியாகில் வீனராதல் நாலு சாதிக்குங் கீழ்ப்படாரென்க செவ்வாயாகில் வைசியராதல் சூத்திரனாதலென்க பாம்பாகிற் புலையரென்று நிச்சயிப்பது, எ-று. 224

தந்தவுடலைச்சனிநோக்கிற் றகரின்மதிசேய்தானிற்க
வந்தகுழவியிரந்துண்ணு மகவினுடலோடுயிர்தம்மை
முந்தநோக்கிற்சீர்கேடா முணர்செய்காலவோரையுடன்
செந்தேன்மொழியாய்சனிகண்டஞ் சேரபிறந்தான்சிறைபுகுமே.

இ-ள். சுபக்கிரக நோக்கின்றியிருந்த சந்திரலக்கினத்தைச் சனி முழுநோக்கு நோக்க சந்திரனும் செவ்வாயும் மேஷத்தில் நிற்கப் பிறந்தான் பிச்சை புக்குண்ணும் சந்திரலக்கினத்தையுஞ் சென்மலக்கினத்தையும் சுபக்கிரகம் நோக்காதொழிய சனிமுழு நோக்கப் பிறந்தான் சீர்கேடனும், செவ்வாயின் காலவோரையில் சென்மத்தில் சனி கண்டங்களில் சந்திர னிற்கப் பிறந்தான் சிறை புகும், எ-று. 225

சிறைந்தஉதையஞ்சனியாயேழ் பாம்பாய்தெரிவைபுகர்சேர
இறந்தமதினுள்பிறவன்ற னிருகாற்கைகள்தறிப்புண்ணும்
பிறந்தவுயிர்காற்சேயாகிற் பெரியகதிரோனதினுதிப்ப
குறைந்தமதிப்பாம்பொருசாலிற் கூடலுடலுமறிப்புண்ணும்

இ-ள். சனியுதையமாக அதற்கு ஏழாமிடத்தில் பாம்புநிற்கக் கன்னியிலே வெள்ளிநிற்க அமரபட்சத்துச் சென்றழகின்ற சந்திரனின்றகாலிற் பாம்புங் கூடநிற்கப் பிறந்தான் கையுங் காலுந் தறிப்புண்ணும் செவ்வாயி னங்கத்தே ஆதித்த நிற்க அதுவே யுதையமாகத் தேய்ந்தழிகின்ற சந்திரனும் பாம்புமொரு காலிலே யுறில் அப்போ பிறந்தானுடல் பிளப்புண்ணும், எ-று. 226

உடர்கட்கதிர்பாம்புறக்காரி புதிப்பப்பிறந்தானுடல்பிளவா
மடிக்கண்ணரவனோக்கமதி யிழந்தமகப்பேர் தலையறுமென்
கடித்தகாதேட்சேய்நிற்பச் சனிவந்துதிப்பப்புதன்மூன்றிற்
குடிக்குமொருசேயெனப்பிறந்தான் குறளாங்கோவைச்செவ்வாய்

இ-ள் அமரபட்சத்து அமாவாசையின் கடக சந்திர லக்கினத்து நின்ற சந்திரனுடனே ஆதித்த நிற்க அவர்களுடன் பாம்புநிற்க சனி யுதையமாகப் பிறந்தான் உடல் பிளப்புண்ணும் ராகுகேதுக் கள் நோக்குப்பெற்ற க்ஷீணசந்திரன் சுடற் சிலவாகப் பிறந்தான் தலையறுப்புண்ணும் மேஷத்திலாதல் விருச்சிகத்திலாதல் செவ் வாய் நிற்க சனி உதையமாக உதையத்துக்கு மூன்றுமிடத்தில் புதனிற்கப் பிறந்தான் குருளுறவாம். 227

வாய்ந்தகோட்களோரேழி லாறுமருத்தமதுச்சங்
காய்ந்தமடங்கலுதித்திடினுங் கனகனுதிப்பவைந்துக்கோ
ளேய்ந்துமுச்சமெய்திடினு மிசைந்தநாற்கோளுச்சமற
வாய்ந்தகுடத்திற்கருதிப்ப வரினுமரசர்க்கரசாமே.

இ-ள். ஆதித்தன் முதலான ஏழுகோட்களினும் ஆறுகோட் கள் தந்தா முச்சத்து நிற்ப சிங்கம் உதையமாக வியாழம் நிற்கப் பிறந்தானும் ரு-கோள் தந்தா முசத்து நிற்ப வியாழ முதையமா கப் பிறந்தானும் ச-கோள் தந்தா முச்சத்து நிற்ப கும்பத்திற் சுக்கிரனுதையமாகப் பிறந்தானும் அரசர்க்கரசனும், எ-று. 228

அரசாம்நண்டில்நிறைந்த மதிதன்னையாறுகோள்நோக்கப்
புரைசால்குண்டையுதித்திடினு மொருகோளுச்சமுறநேதார்
கரைசேராட்சிநட்பெனினுங் கன்னிபுதனுய்க்கயற்புகராய்
விரைசேர்தனுபொன்மேவிடினு மிக்கோர்நட்பில்வேந்தாமே.

இ-ள். கடகத்துப் பூர்ணச்சந்திரனை கூ-கோள் நோக்க ரிஷப முதையமாகப் பிறந்தானும் சுபக்கோளில் ஒருகோ ளுச்சத்து நிற்க மற்றைக் கோள்கள் தந்தம் நட்பினு மாட்சியினும் நிற்கப் பிறந்தானும், கன்னியில் புதனிற்க மீனத்தில் வெள்ளி நிற்க தனு சில் வியாழம் நிற்க மற்றைக் கோட்கள் தந்தம் நட்பினு மாட்சியி னும் நிற்கப் பிறந்தானும், கன்னியில் புதனிற்க மீனத்தில் வெள்ளி நிற்க தனுசில் வியாழம் நிற்க மற்றைக் கோட்கள் தந்தம் நட் பினு மாட்சியிலும் நிற்கப் பிறந்தானும் இராச்சிய பரிபாலனம் பண்ணுவான், எ-று. 229

வேந்தனலவந்தனிலுதிப்ப வெய்யோன்மேடம்விடைபுகர்மால்
சேர்ந்துவரினும்விடைமதியாய்ச் சிங்கங்கதிராய்ச்சிலைக்குருவா
யாய்ந்தவெள்ளியுதையத்து ளம்பொற்காலிற்பிறந்தினும்
வாய்ந்தமதிக்காறேழெட்டில் மாற்பொன்புகரேல்மன்னுமே.

இ-ள். கடகத்தில் வியாழமுதையமாக ஆதித்தன் மேஷத்து நிற்க வெள்ளியும் புதனும் ரிஷபத்து நிற்கப் பிறந்தானும் சந்திரன் ரிஷபத்து நிற்க ஆதித்தன் சிங்கத்து நிற்க வியாழந் தனுசில் நிற்க வெள்ளி யுதையமாக வியாழம் அங்கசத்து சாதகமானும் சந்திரனுக்கு ௪-மிடத்தில் புதனிற்க ௭-மிடத்தில் வியாழம் நிற்க ௮-மிடத்தில் சுக்கிர நிற்க சாதகமானவனும் சத்துருக்களையுஞ் செயித்து ராச்சியபரிபாலனம் பண்ணுவான், எ-று. 230

பன்னுமகரஞ்சனிமறிசேய் மதியங்கடகத்துலைவெள்ளி
பொன்னன்வில்லிற்கதிர்சிங்கம் புலவன்வீணைபொருந்திடி
சுன்னுமதியுமுச்சமுறச் சுடரும்புதனுமுயிற்காரில்
மின்னும்புகர்பொன்றம்மிடத்தே மேவுமெனினுமிகவாழ்வே.

இ-ள். சனிமகரத்தும் செவ்வாய் மேஷத்தும் சந்திரன் கடகத்தும் வெள்ளி துலாம் வியாழம் தனுசிலும் ஆதித்தன் சிங்கத்திலும் புதன் மிதுனத்திலும்நிற்க சனியுஞ் சந்திரனும் தந்தா முச்சத்தில் நிற்க, ஆதித்தனும் புதனும் சென்மலக்கினத்துக்கு ௪-மிடத்தே நிற்க வெள்ளியும் வியாழமும் தந்தாமாட்சியிலே நிற்கப் பிறந்தான் சத்துருக்களையுஞ் செயித்து அதிகசெல்வத்துடன் இராச்சியபரிபாலனம் பண்ணுவான், எ-று. 231

வாழும்வெள்ளிமிதுனத்து மதிபொன்தனுவில்மண்மகன்தேள்
சூழமருவைபுதனுமையந் தோன்றிலரசாஞ்சுடரிரண்டும்
தாள்விழுச்சமுறவவையே யுதிப்பக்குளிர்பொன்சனிகுடத்தில்
ஆழில்மேதைதேட்செய்வந் தெய்தப்பிறப்பினிறையாமே.

இ-ள். வெள்ளி மிதுனத்துநிற்ப சந்திரனும் வியாழமும் தனுசில் நிற்ப செவ்வாய் விருச்சிகத்தில் நிற்க கன்னியிற் யுதையமாகப் பிறந்தவன் எல்லாத் தேசமும் ஆளுவானென்பது சந்திராதித்தரிருவரும் தந்தா முச்சத்து நிற்ப அவையே யுதையமாக வியாழங் கடகத்து நிற்க சனி கும்பத்து நிறப புதன் மிதுனத்து நிற்ப செவ்வாய் விருச்சிகத்து நிற்கப் பிறந்தான் எல்லா தேசத்துக்குச் சக்கிரவர்த்தியாவான். 232

இறைவன்சேனைத்தலைவனுவா முக்கோணுச்சமெழிற்புகர்பொன்
னறையமுச்சமச்சமுமா மருக்கன்மேடந்தனுக்குருவாம்
பிறையைவெள்ளிஏழிடத்தே நோக்ககாலிற்பிறந்தானேற்
பொறையும்வலியுமிருதியும் புகழுங்கொடையுமிகப்பூணும்

இ-ள். மேடத்தில் சூரியநிற்க தனுசில் வியாழம் நிற்க சந்திர னுக் கேழாமிடத்திலே சுக்கிரனிருந்து பார்க்க வொருகாலிற் சேரப் பிறந்தவன் பொருமையும் வலுவும் நவரத்தினங்களும் தன மும் கீர்த்தியும் நகையுமுடைபவனாக விருப்பான், எ-று. 233

பூண்டவிடையில்மதிக்கேழிற் பொன்னய்பொற்காலிற்பிறந்தான்
றாண்டபுதற்காற்பொன்னுதிப்பச் சுருச்சேயடையத்தோன்றின்
நீண்டகுருவுநிறைவுமதியுஞ் சேரநெடுமாற்பெண்சேர
ஆண்டபுகரினுதையத்து வரிநங்கல்வினியாமே.

இ-ள். சந்திரன் ரிஷபத்து நிற்ப அவனை ஏழாமிடத்தே வியாழம்நோக்க வியாழ முதற்காலிற் பிறந்தானும் வியாழமுதை யமாகச் செவ்வாய் மகரத்து நிற்ப சுக்கிரன் அங்கசத்துப் பிறந்தா லும் வியாழமும் நிறைமதியுங் கூடிநிற்கக் கன்னியிலே புதனிற்க வெள்ளி யுதையமாகப் பிறந்தானு லோகாதிபதியுமாய் கல்விக்கா சனுமாவான், எ-று. 234

நிதியுடைப்புகர்மீனுள னெடுங்குருவுதிப்பநீண்ட
மதியினைத்தீக்கோணேக்க யாநிதித்தலைவனகுங்
கதியுடைப்புகர்பொன்றிங்கள் கலந்திடக்காரிதுங்க
னுதையமாய்பிறந்தான்வாழி யொருவற்குமொன்றுமீயான்.

இ-ள். சுக்கிரன் மீனத்து நிற்க வியாழமுதையமாக வளர்மதி யை தீக்கோள் நோக்கப் பிறந்தவன் ஸ்ரீமானும் வளர்மதியைச் சுக் கிரன் வியாழம் நோக்கத் துலாத்தில் சனியுதையமாகப் பிறந்த வன் தனதிபதியா யொருவற்கு மொன்றுமீயான், எ-று. 235

ஒன்றியமதிக்கிரண்டுபாலும் நற்கோட்களுண்டேல்
என்றும்வாழ்ந்திடுமென்முன்னேல்முந்தியன்பின்றல்பின்னே
நன்றிருபாலுநற்கோள் நின்றிடவுச்சக்கோட்கள்
அன்றவைநேர்க்கத்தோன்று மாயிழையரசியாமே

இ-ள். வளர்மதிக்கு முன்னும் பின்னும் நற்கோள்கள் நிற்கப் பிறந்தவன் மரிக்குமளவுஞ் செல்வனும் சுகசந்திரனுக்கு முன்னே நிற்கில் பாலியத்தில் ஸ்திரீயுண்டாம் பின்னே நிற்கில் விர்தாப்பி யத்தில் ஸ்திரீயுண்டாம் சந்திரலக்கினத்தை சுபக்கிரகங்கள் பற்றி நிற்க உச்சக்கோள் அதை நோக்கப் பிறந்தவன் ராஜஸ்திரீயாம்.

அரசுறுபுதனுதிப்ப வம்புலிக்கேழ்பன்னென்று
முரவியபுகர்பொன்கூடி னிற்பினுமுடனுயிற்கு

விரவியைக்கெழிற்செம்பொன் வெள்ளினின்றிடினுமிக்க
புரவலர்போற்றச்செல்வங் கல்விவந்தெய்தும்பொன்னே.

இ-ள். புதனுதையமாக நிறைமதிக்கு எ-மிடத்து வியாழம் நிற்கப் பிறந்தவன் சேனுதிபதியாம் வியாழமுஞ் சுக்கிரனுங் கூடி னின்றாலும் உடலுக்கு முயிருக்கும் ரு-மிடத்திலும் எ-மிடத்தினும் வியாழமும் சுக்கிரனுங் கூடிநிற்கப் புதனுதையமாகப் பிறந்தவன் அரசர்கள் போற்ற செல்வமுங் கல்வியு முடையவனுவான், எ-று.

பொன்னுடன்வெள்ளிபுந்தி பொலிவுடனோக்கவந்த
மின்னிளங்குழவிதன்மேல் வலிந்ததீக்கோள்கணேக்குப்
பன்னெடுங்கதிர்வாள்வீசும் பகலவன்றன்னைக்கண்ட
துன்னருள்போலமாய்ந்து சுகமிகப்பெருகுமன்றே.

இ-ள். வியாழமுஞ் சுக்கிரனும் புதனும் நோக்கப் பிறந்தவன் பாபக்கிரகங்கள் செய்யுந் தன்மைகள் ஆதித்தனைக் கண்ட யிருள் போல நீங்குமென்பது, எ-று. 238

விஷம்-அயனம்-விஷ்ணுபதம்-சடாதாரிமுகம்.

பெருவிஷமறிகோல்கண்டு மகரமுமயனப்பேரா
மருவிடைகுடந்தேள்விண்டு பதமென்பவரிவைவில்மீன்
றருமிதுனங்கன்னுன்குஞ் சடாதாரிமுகமுமென்க
இரவினில்வினையுண்டாகும் பகல்வினைவில்லையென்னே.

இ-ள். சித்திரையும் அற்பிசியும் விஷமென்றும் ஆடியும் தையும் அயனமென்றும் ஆவணி வைகாசி மாசி கார்த்திகையும் விஷ்ணுபதமென்றும் புரட்டாசி மார்கழி பங்குனி ஆனியும் ஜடாதாரி முகமென்றறிக இந்த பன்னிரண்டு மாதங்களும் இரவினிற் பிறந் தால் வினையுண்டாகும் பகலில் பிறந்தால் வினைவில்லை, எ-று. 239

வருடாதி சித்திரை மாதம் கஉ.

விளங்கியகதிரோன்வாரஞ் சிறுமழைவெள்ளத்திங்கள்
களங்கொளன்செய்கலகம்புந்தி காற்றுப்பொன்காலனன்றும்
வளம்பெறுவெள்ளிவெள்ள மந்தனில்மழைகேடாகுந்
தெளிந்தசங்கிராந்திவிட்டி யெட்டுவாவிருத்தைதீதே.

இ-ள். வருடாதி சித்திரைமாதம் முதற்றேதி ஞாயிற்றுக்கிழ மையாகில் சிறுமழை திங்கள் வெள்ளம் செவ்வாய் கலகம் புதன்

காற்று வியாழம் நற்காலம் வெள்ளி பெருமழை சனி மழையில்லை விஷ்டி அஷடமி உவா விருத்தை இவையுந் தீது, எ-று. 240

தீதிலுத்திரங்களத்தந் திருவோணமவிட்டந்தோணி
யோதுமான்றலேயேமூல முத்தமஞ்சங்கிராந்தி
சோதிசித்திரைபார்செக்குப் பூசங்கண்மகவேவாசி
மாதராயனுடங் காலமந்தீதுமற்றே.

இ-ள். உத்திரம் ரு-அத்தந் திருவோணம் அவிட்டம் ரேவதி மிருகசீரிடம் மூலம் இவையிற்றில் சங்கிரமமிருக்கில் உத்தம காலமாம் சோதி சித்திரை ரோகணி சதையம் பூசம் அசுவதி அனுடம் இவையிற்றில் சங்கிரமமிருக்கில் மத்திமகாலம் பரணி கார்த்திகை திருவாதிரை ஆயிலியம் பூரம் ரு-ம் விசாகங் கேட்டை இவையிற்றில் சங்கிரமமிருக்கில் அதமகாலமென்பது, எ-று. 241

அஃகம்.

மற்றிருபூசம்பாருத்திரங்கள் மான்றலையுமேறும்
புற்றரவத்தஞ்சோதி யாதிரைபரணியோந்தை
விற்றதிர்குறையுமாக்க மிக்கவைநிற்கும்விட்டி
சுற்றுவாவிருத்தையெட்டுங் குளிகனுஞ்சுருங்குமஃகம்.

இ-ள். புநர்பூசம் பூசம் ரோகணி உத்திரத்திரயம் மிருகசீரிடம் இவை யஃகமேறும் ஆயிலியம் அஸ்தம் சோதி ஆதிரை பரணி அனுடம் இவை குறையும் இதிற் சொல்லாத நாட்களொத்து நிற்கும் உவா இருத்தை அஷ்டமி குளியன் இவை அஃகம் குறையும்.

சுருக்கமில்சங்கிராந்தி சுடர்சனிகிடக்குஞ்சோமன்
றிருக்குடைச்செவ்வாய்நிற்குஞ் செம்பொன்மாவிருக்கும்
தருக்குடைநடைவயிற்றிற் றாழ்ந்திடுங்கிடையிலஃகம்
உரைத்தவைநிற்கினிற்கு மொழிந்தவையுயருமன்றே.

இ-ள். ஞாயிறுஞ் சனியுங் கிடக்கும் இவையிற்றி லஃகம் தாழும் திங்கட் செவ்வாய் நிற்கும் இவையிற்றி லஃகம் நிற்கும் புதனிருக்கும் வெள்ளி நடக்கும் இவையிற்றிலக்கம் ஏறும், எ-று.

உயிர்விடைசிலைமீன்சிங்க மொளியிழைதகரில்வெய்யோ
னியல்புடைவெண்பூவெண்பட் டணிந்திடுவிலற்றிலேறு
மயல்சிறுசிவப்புச்சாத்து மற்றவைதன்னிற்குன்றுஞ்
செயலளவுடையநிற்குந் திறந்தாழுஞ்சாத்திலேறும்.

இ-ள். ரிஷபம் தனுசு மீனம் சிங்கம் கன்னி மேஷம் இவை யிற்றில் ஆதித்தன் வெண்பூ வெண்டுகிலில் சாத்தும் இவையிற்றில் அக்கம் ஏறும் மிதுனம் மகரம் கடகம் துலாம் விருச்சிகம் கும்பம் இவையிற்றிற் செம்பு செந்துகில் சாத்தும் இவையிற்றில் அக்கம் குறையும் உபயராசிகள் நிற்குமென்றும் திரராசிகள் தாழுமென் றும் சரராசிகள் ஏறுமென்றும் சொல்லுக, எ-று. 244

ஏறரிமேடம்வெய்யோ னியற்புலியுருவாமித்தற்
பாறுமாமனிதர்மீன்சல்லா பாவையில்விடையாமாரி
யாறலைத்திடுமியாழ்கோல் தேளறியதூமாசர்தம்மில்
மாறுவாவருடைமற்றும் வந்தமேதவர்துநிற்கும்.

இ-ள். ரிஷபம் சிங்கம் மேஷம் இவையிற்றில் ஆதித்தன் புலி யுருவாம் மனுஷரெல்லாமாயும் மீனம் கும்பம் கன்னி யிவையிற் றில் ரிஷபமாம் பெருவருஷமுண்டாம் மிதுனம் துலாம் விருச்சி கம் இவையிற்றில் சிங்கவுருவாம் இவை ராசாக்களுக்கு யுத்தமுண் டாம் மகரம் கடகம் தனுசு இவையிற்றி லாதித்தன் வருடையாம் இவை மூன்மாதத்திலே செய்தவகை செய்யும், எ-று. 245

நின்றசங்கிராந்திநாடி நேற்பகுத்தொருகூறொன்பா
னென்றுவித்தேறிற்றுக்கி யொருமூன்றிற்கீழ்ந்தசேடம்
ஒன்றெனிற்குறையுமங்க மோரிரண்டேறுமூன்றேல்
நின்றிமெருக்கன்பாட்டி னிலாவெழும்நிலையிற்றாழும்.

இ-ள். சங்கிரமத்து நாழிகையை இருகூறுக்கி யொருகூறிலே யொன்பது கூட்டி இதனை ஏழிற்பெருக்கி மூன்றுக்கீய்ந்து நின்ற சேடம் ஒன்றாகிற் குறையும் இரண்டாகி லேறும் மூன்றாகில் நிற் கும் ஆதித்தன் அஸ்தமானமாகிலும் சந்திரனுதையமாகிலும் தாழு மென்பது இவையெல்லாவற்றையும் பார்த்து மிகுதியாற் பலன் சொல்லுவது, எ-று. 246

சங்கிராந்தி பலன்.

தாழ்புயற்பெய்யிற்பெய்யுந் தையுங்கார்த்திகையுமாற்றை
வாழுமைப்பசியினோடு மார்கழிபெய்யிற்பொய்யாச்
சூழ்சனியருக்கன்செவ்வாய் சொன்னசங்கிராந்தியாமேல்
வீழ்புவலிவ்லைநற்கோள் வாரமேல்வாரிமென்மேல்.

இ-ள். தைமாதமும் கார்த்திகை மாதமும் சங்கிரம காலத்தில் வருஷம் பெய்யில் அம்மாதங்களிலே வருஷமுண்டாம் ஐப்பசி

மார்கழியும் பெய்யிற் [illegible] அன்று செவ்வாய் சனி ஞாயிறு ஆகிய வருஷமில்லை நற்கோள் வாரங்களில் சங்கிரமிருக்கில் பெரு வருஷமுண்டு, எ-று. 247

சன்மநக்ஷத்திர பலன்.

மேவுசங்கிரமனாள்முன்பின் மிக்கவர்பிறந்தநாளே
லோவிலாதனத்தைப்போக்கு மொழிந்தநாளாறுசெல்வந்
தாவில்யாத்திரையாமூன்று தனபதியிறுத்துமாறுங்
கோவினற்பயனுண்டென்றுங் கொற்றவனருள்மற்றாரே.

இ-ள். சங்கிரமத்துக்கு நாளும் அதற்குமுன் பின்னாளும் பிறந்த நாளாகில் அர்த்த ஹானி அதன்பின் ௯-நாளும் செல்வம் அதன்பின் ௩-நாள் ஸ்தானபேதனம் அதன்பின் ௯-நாள் தனப்பிராப்தி அதன்பின் ௯-நாள் ராஜபூஜை இவ்வகையால் இருபத்தேழுநாளுங் கண்டுகொள்க இவை பிறந்தநாள் தொட்டெண்ணு வாருமுளர். எ-று. 248

ஆனிமார்கழியின்றேளோ டாடியிற்றலையுவாவில்
வானிடிப்புதிரங்கூடல் மண்கம்பங்கிராணம்வட்ட
மீன்விழுந்திடுதலாலங் கட்டிகள்விழுதல்செய்யிற்
றானியதுவற்றிற்கஞ்சா திங்களிற்சாயமன்றே.

இ-ள். ஆனி மார்கழி கார்த்திகை ஆடி இம்மாதங்களில் பவுரணையில் இடிப்புன்திரமாக விழுதல் பூகம்பம் கிராணம் பரிவேஷம் நக்ஷத்திரம் வீழ்தல் செய்யில் இம்மாதங்களுக்கு ௫-மாதங்களிலே அஃகம் அறிவுந்தாழும், எ-று. 249

சார்ந்தபங்குனியின்மாசி தையிலிக்குறிகளுண்டே
லேய்ந்தசந்தனம்பொன்பட்டுக் குறையுமேழ்திங்கடன்னி
லார்ந்தவைப்பசிபுரட்டை யுளவெனிற்குதிரையானை
மாய்ந்திடுமிவற்றிற்கைந்தாந் திங்களின்மயிலேயன்றாய்.

இ-ள். பங்குனி மாசி தை இம்மாதங்களில் தலையுவாவில் முன்புசொன்ன குறிகளுண்டாகில் இவையிற்றுக்கு ௭-மாதத்துக்குள்ளே பொன் பட்டு சந்தனங் குறையும் ஐப்பசி புரட்டாசி இவையிற்றி லுண்டாகில் இதற்கு ௫-மாதத்துக்குள்ளே யானை குதிரை நசிக்கும், எ-று. 250

அன்னைசித்திரைவைகாசி யவற்றினாலாந்தாந்திங்கள்
தன்னினூல்பருத்தியெள்ளு தானியங்கிறங்குராய

முன்னதாவணியிலுண்டேல் முதிரைவெண்கலநெய்வெண்ணெய்
இன்னுருகிழங்குதிங்க ளிரண்டினுட்குறையுஞ்செவ்வே.

இ-ள். சித்திரை வைகாசி இவற்றில் உளவெனில் அவையீற்றுக்கு டு-ம் மாதத்துக்குள் நால்பருத்தி எள்ளுதானியம் கிழக்கு இவை யெல்லாங் குறையுமென்க, ஆவணிமாதத்தில் முன்பு சொன்னகுறியுண்டாகில் அதற்கிரண்டா மாதத்துக்குள் முதிரை வெண்கலம் நெய் எண்ணெய் நின்கிழங்கு இவை குறையும்-எ-று. 251

உத்திராடக்காற்று.

செவ்வைகீழ்காற்றுத்தீதாங் தென்னகர்கோன்பின்னுமாரி
கவ்வைசேர்தென்கீழ்காற்றேல் கலகமும்பசிகோளுண்டாம்
வவ்வயில்தென்றற்போரா மில்லையேற்பசியால்மாயு
வவ்வலைக்குழலாய்தென்மேல் வளிதுளிவந்துபோமே.

இ-ள். ஆடிமாதத்தில் உத்திராடத்தினன்று உதையத்திலே கீழ்காற் றடிக்குமாகில் பாண்டியனுக்குப் பொல்லாது பின்மாரி வருஷமுண்டு கீழ்மூலை காற்றடிக்குமாகில் கலகமும் பசியும் கோளருமுண்டாம் தெற்குக் காற்றாகில் யுத்தமும் பசியுமுண்டாம் தென்மேற்கு மூலைக்காற்றால் வில்லை-எ-று. 252

போதுமேல்காற்றேல்மாரி பொழிந்துநற்காலமாகு
மேதகுவடமேல்காற்றேல் மிருகங்கள்பெருக்கவுண்டாம்
கோதிலாவடக்கையாகிற் குவலயம்வெள்ளக்கேடா
மேதகுவடகீழ்காற்முன் மாரியாய்விளையுமெங்கும்.

இ-ள். மேல்காற் றடிக்குமாகில் மாரிபொழிந்து நற்காலமாகும் வடமேற்காகில் மிருகங்களாகிலும் விட்டில்நாவாய்ப் புழுக்கள் உண்டென்பது வடகாற்றாகில் பூமியெல்லாம் வெள்ளக்கேடாம் வடகீழ்காற்றாகில் முன்மாரியாய் விளையும்-எ-று. 253

எங்குளவளியுமீண்டி யெறிலதுவலமேநன்று
மங்கையைவிடத்திற்றீதா மாலையுத்திராடமான
இங்களிலுலாவுங்கூடி னெழின்மிடையுவாவுற்
செங்கதிரவனைமேக மறைக்குமேற்சிவக்குமாரி.

இ-ள். அடியிற் சொன்ன காற்றெல்லாம் வலமாக வீசுமாகில் உத்தமமென்றும் இடமாக வீசுமாகிற் பொல்லாதென்றும் உத்திரா

டத்துடன் உவாவுங்கூடில் உதையகாலத்தி லாதித்தனை மேகமறை க்குமாகில் ஊனமற வருஷிக்கு எ-று. 254

பஞ்சமிக்குறி.

சிறப்புடையாடிதன்னிற் சிறந்தமுற்பக்கத்தைந்தில்
விறற்கதிர்வாரமற்ப மழைதிங்கள்வெள்ளமாரு
மறப்பரும்பூசல்செவ்வாய் மால்காற்றுவியாழமாரி
குறிப்பரும்வெள்ளிவெள்ளங் கொடுஞ்சனிகுறையுங்கொண்டல்.

இ-ள். ஆடிமாதம் பூர்வபக்ஷத்தில் பஞ்சமி ஞாயிற்றுக்கிழமையாகில் அற்பவருஷம் திங்களாகில் வெள்ளம் செவ்வாயாகில் காற்று வியாழமாகில் நிறையவிளையும் வெள்ளியாகில்பெருவருஷம் சனியாகில் விளைவில்லை எ-று. 255

சோதிக்குறி.

கொண்டல்மந்தாரங்காற்று குவிலயமுழக்கமின்னல்
கண்டின்முற்பக்கம்வந்த நவமியிற்சோதிநாளி
லுண்டெனின்மாரிமுன்னு முயர்முறந்தசமிதன்னிற்
கண்டிலநடுவுபன்னொன் றனுடமேற்கடையிற்பெய்யும்.

இ-ள். ஆடிமாதம் பூர்வபக்ஷத்தில் நவமியுஞ்சோதியுங் கூடின நாளில் மந்தாரமாதல் மழையாதல் மின்னலாதலுண்டாகில் முன் வருஷமாம் தசமியும் விசாகமும் கூடினநாளில இந்தக்குறியுண்டாகில் நடுவில் வருஷமென்பது ஏகாதசியும் அனுடமுங் கூடினநாளில் பின்னே வருஷம் எ-று 256

ஆடிக்குறி.

கடையிற்றசமிபன்னொன்று ரோணிநாட்கதிரைமேக
யினுமாடிப்பூரம்வெள்ளி பொன்றிங்களேனு
மடைமழையல்லாவார மற்பமென்றுத்திராடந்
திடமுடையானிமூலம் வில்லுமேற்கிடினுந்தீதே.

இ-ள். அமரபட்சத்து தசமியும் ஏகாதசியுடன் கூடினரோகணி நாள் மந்தாரமுண்டாகில் அவ்வாண்டு வருஷை மிகுதியென்றும் ஆடி பூரம் வெள்ளி வியாழம் திங்களில்வரில் அடைமழையென்றும் அல்லாத வாரம்வரில் வருமில்லையென்றும் ஆடியுத்திராடம் ஆனிமூலம் மேற்கேவில்விடில் அவ்வாண்டு விளைவில்லை எ-று.

## கெர்ப்பவோட்டம்.

தியபூராடம்வெய்யோன் சேர்ந்திடுநாளில்வட்டந்
தூயமந்தாரந்தோன்றிற் சுடாவறுதிரைக்கே
பாயுநாள்தொட்டுமுன்பி லொருநாட்குப்பதினாலாகக்
காயும்னேற்கண்ணாய்சொல்லுங் கார்மழைகருப்பந்தானே,

இ-ள், மார்கழிமாதத்தில் ௰௪௳ உ௰ - நாழிகைக்குப்பின்பு பூராடத்திலே யாதித்தன் சென்று பிரவேசிக்குமென்று முதலாகப் பதின்மூன்றுநாளும் உ௰-நாழிகையும் நிற்கும் இந்நாட்களில் மந்தாரமாதல் பரிவேஷமாதலுண்டாகில் ஆனிமாதத்து எ-தேதி ௪௰ நாழிகைக்குப் பின்பு ஆதித்தன் திருவாதிரையிற்சென்று பிரவேசிக்கும் முன்புசொன்ன குறியுறுநாள் முழக்கமுண்டாகில் பின்சொன்னநாளில் ௰௪-நாளும் அடைமழையென்று இக்கணக்கிலே பார்த்துச் சொல்லுவது எ-று. 258

## கிராணபலன்.

கருதும்பூரமகம்பூசங்கள் குலாரல்முறம்புரட்டை
விரியுமக்னிமண்டலமாம் விட்டமாயில்விளக்கத்த
மருவுங்குதிரையுத்திரஞ் சித்திரையும்வாயுமண்டலமாந்
தெரியுமிவற்றிலாவுருமேற்சேரும் பசிநோய்தெரிந்தரியே.

இ-ள். பூரம் மகம் பூசம் பரணி கிர்த்திகை விசாகம்பூரட்டாதி இவை யக்கினிமண்டலம் அவிட்டம் ஆயிலியம் சோதி அத்தம் அசுவனி உத்திரம் சித்திரை இவை வாயுமண்டலம் இவையிற்றில் கிராணந்தீண்டில் பசியும் நோயுமுண்டாம் மனுஷர் மாய்வர் எ-று.

அறிவன்சதையங்கடைமூல மணிமான்றலையேபூராட
மிறைவன்வருணமண்டலமா மெழிற்பாராடிபனிகேட்டை
மருவிற்புனர்தம்பிசித்து மன்னுமோனங்கேந்திரமாம்
விறைகோளரவமிவற்றுறுமேல் வெள்ளம்பெருத்துவிளங்கும்பார்.

இ-ள். உத்திரட்டாதி சதையம் இரேவதி மூலம் மிருகசீரிடம் பூராடம் திருவாதிரை இவை வருணமண்டலமென்றும் ரோகணி உத்திராடம் அனுடங்கேட்டை புனர்பூசம் அபிசித்து திருவோணம் இவை மாகேந்திரமண்டலம் இவை யீற்றில் கிராணந்தீண்டில் நிறைமழை பெருகிப் பூமியெல்லாம் விளையும், எ-று. 260

விளங்குங்கதிர்கள்தம்மைப்பாம்புண்ணும்புமுதுமின்முழக்கம்
வளைக்குகூடில்வளிதுனிவில்மருவில்மாரிவளஞ்சுரக்குந்
துளங்குமச்சர்செங்கோற்கள் சோமன்றனையுமருக்கனையுந்
தளங்கொளரவம்பதினைந்திற் சாரிற்பசிநோய்தப்பாதே.

இ-ள். சந்திராதித்தரைக் கிராணந் தீண்டும்போது மின்னுதல் முழங்குதல் பரிவேஷித்தல் காற்றடித்தல் வருஷித்தல் விற்விடுதல் செய்யில் வருஷித்துத் தேசமெல்லாம் விளையும் ராசாக்களுக்குச் செயமுண்டாம் சோமனைக்கிரகணம் பற்றிருக்கையில் பதினைந்து நாளையில் சூரியகிரகணம் வருமாகில் பசியுமுண்டாம் மனுஷர்மரிப்பார்கள்-எ-று. 261

தற்பிற்கதிர்கள் தலைவநாகந்தான்கொண்டெழுமேன் மழைதவரு
மொப்பவுண்டவழிபாடேயு மிழிலுகம்விளைவுண்டா
மப்பியுடனேவிழுங்கிவிழிலரசர் செங்கோற்கழிவுண்டாஞ்
செப்பின்முலையாயூடறுக்குற் றின்னமுலைகஞ்சிதைந்திடுமே.

இ-ள். சந்திராதித்தருதையங்களிலே இராகு கேதுக்கள்கொண்டெழுமாகில் வருஷமில்லை உண்டாப்போலேயுமிழுமாகில் உலகமெல்லாம் விளைவும் அஸ்தமான காலத்திலே பற்றி உடனே விழுங்கிவிடில் ராசாக்களுக்கு மரணமுண்டென்பது ஊடறுக்குமாகில் பூமிக்கழிவுண்டு-எ-று. 262

ஜன்மநட்சத்திரதோஷமும் பரிகாரமும்.

சிதைவிற்பிறந்த பின்முன்னாட் சென்மராசிரயச்சேரிற் புதல்வன்மனைவிசோய்பொழில் லாவிபொன்பேருற்றருடன் போன்று, மதனையொழிக்கின் வெண்கலத்தினெய்வார்த்தாவைப்பொன்னாலே மதியொண்ணுதலாய் சமைத்ததன் வைத்து கொடுக்கமறையோர்க்கே.

இ-ள். பிறந்தநாள் முன்பின் மூன்றினும் சென்மவாரத்திலும் சென்மராசியிலும் கிராணந்தீண்டில் விருட்சம் குளம் ஆர்த்தம் இவையுமழிந்து பந்துக்களுக்கும் புத்திரனுக்கும் ஸ்திரீக்கும் தனக்கும் மரணமுண்டாம் அதுதவிர்க்க வேண்டில் வெண்கலத்தாலே வொருபாத்திரஞ் செய்து நிறைய நெய்வார்த்து பொன்னாலே பாம்பாகச் சமைத்து அதிலேயிட்டு பிராமணருக்குத் தானமாக்கொடு.

கிரகவெற்றித் தோர்வை.

மறுவெண்டிங்கட்சனிசேயை விழுங்கின் மன்னர்கோல் வளரும்
பிறைபொன் புதனைவிழுங்கிடினும் பின்னும்வெள்ளி வியாழத்தை
யரவுண்டிடினுமனுப்பெரிதா மம்பொன் புகரோன் சனிசேயை,
தீரவுண்டிடினும் பசிபெரிதாஞ் செவ்வாய்சனியுண்டிடிற்பெரிதாம்.

இ-ள். கிரகணகாலத்தில் சந்திரன் சனி செவ்வாயை விழுங்கில் ராசாக்களுக்கு மிகவும் ராச்சியம் செல்லும் சந்திரன் வியாழம் வெள்ளியை விழுங்கில் மனுப்பெருக்கும் வெள்ளி சனிசெவ்வாயை விழுங்கில் யுத்தமுண்டு, எ-று. 264

போரமதிக்குச்சேய்புந்தி பொன்னன்வெள்ளிசனிதோற்கிற்
சீராராசர்கோலோங்குஞ்சேய்க்குப் புந்திமதிதோற்கி
லாராயமைச்சராசழிவாமமைச்சர் தோற்கிற்பசிபூசல்
வாரார்முலையாயொன்றெய் நிதுமந்தன்றோற்கிற்குறும்பறுமால்

இ-ள். சந்திரனுக்குச் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனி தோற்கில் ராசாக்களுக்குத் தேசமெல்லாம் செல்லும் செவ்வாய்க்குப் புதன் சந்திரன் தோற்கில் மந்திரிகளுக்கும் அரசர்களுக்கும் அழிவுண்டாம் வியாழந் தோற்கில் பூசலாம் சனிதோற்கில் குறும்பரெல்லா மழிவார், எ-று 265

அறியும்புதற்கு மதிதோற்க லரசர்க்கிடுக்கண்மைச்சரேற்
குறையுங்கொண்டற் சேய்சனிகள் தோற்கிற்குறும்பற்கழுவாகு
மறையக்குணர்க்குச்சேய்சனிகள் மதியந்தோற்கின்மழைபெரிதாம்
பொறைவன் புந்திபுகர்தோற்கிற் போகம் விளையும்புகலுங்கால்.

இ-ள். புதனுக்குச் சந்திரன்தோற்கில் ராசாக்களுக்கு விசனமுண்டாம் வியாழம் தோற்கில் கொண்டல் குறையும் சேய்சனி மதியம் தோற்கில் மழை மிச்சமாம் புதனுக்கு சுக்கிரன் தோற்கில் போகவிளையும், எ-று. 266

புகர்க்குச் சனிசேய் புதன்றோற்கிற் பொழியுமாரி மதிதோற்கிற், பகைக்குமரசர் பொன்றோற்கிற் பசிநோய் பூபற்பலவுண்டா மிகைத்த சனிக்கு மதிதோற்கில் விளைவுகுன்றும் பொன்றோற்கிற் றிகைக்கும் பசியாற் புகழ்தோற்கின்மழைபொன்சேய்மால்செருப் பெரிதாம்.

இ-ள். வெள்ளிக்குச் சனி செவ்வாய் புதன் தோற்கில் வருஷம் பெருக்கமுண்டாம் சந்திரன் தோற்கில் ராசாக்களுக்குப் பகையுண்டாம் வியாழந் தோற்கில் பசியாதல் வியாதியாதல்பூசலாதல் மனுக்கள் மரணம் சனிக்குச் சந்திரன் தோற்கில் விளைவில்லை வியாழந்தோற்கில் பசியால் மாயும் வெள்ளிதோற்கில் வருஷமில்லை செவ்வாய் புதன் தோற்கில் யுத்தம் பெரிதாம், எ-று, 267

செருக்குக்குஞ் சிங்கமுதலாறிற் சேர்ந்தகோட் கள்வருங்
கோளைப், பெருக்கவெல்லுங்குடமாதி யாறில்நின்ற பெருங்கோளை
விறிக்கில்வருங்கோ ளவைவெல்லும் வெற்றிதோல்வி மெல்லியலா
யுரைக்கில் வெற்றிபுகர் தெற்கிலொழிந்தார் வெற்றிவடக்குறிலே.

இ-ள். சிங்கமுத லாறிலும் நின்றகோட்கள் வருங்கோளை வெல்லும் வெள்ளி தெற்குறில் வெற்றியல்லாதவர் வடக்குறில் விஜயம், எ-று. 268

வடித்தபொன்னி னுடனதற்கேழ் மந்தன்பாம்பு சேயுறினுங்,
கூடித்தசேயோடரவுறினுங்காரி செவ்வாய்பாம்புறினுந், தடித்த
மீன்றேற்கடையிலே சேவேறரிமுன்சனிவறினு, மிடுக்கண்பெரி
தாம் மழையின்றி யெட்டென்ருகு மனுவெல்லாம்.

இ-ள். வியாழத்துடனு லதற்கு எ-மிடத்து சனியாதல் பாம்பாதல் செவ்வாயாதல் நிற்பினும் செவ்வாயோடு பாம்புகூடினும் சனிசெவ்வாயோடு பாம்புகூடினும் மீனத்திக் கடையிலாதல் விருச்சிகத்துகடையிலாதல் ரிஷபத்துக்கு நடுவாதல் சிங்கத்துக்கு முதலாதல் சனிநிற்பினும் வருஷமின்றி விளைவு குன்றி தேசத்தில் சர்வ பிராணிகளும் வியாதியாலும் பசியாலும் மரணமெய்துவர், எ-று.

துர்விஷய லட்சணம்.

மனுவேறறிதேட் கயல்தனுவில் மந்தன்செவ்வாய்வக்கிரிக்கல்,
வினையேபெருகும் வேந்தற்கு வெள்ளிக்கேழில்பொன்மேவில்துனி
யாஞ் சுங்கன்படி நடத்தற் சுன்மாற்கெடையே கதிர்நிற்கில், சனி
சேர்கதிற்கு முன்சனிசேய் நடத்திற் பஞ்சம் நாடெல்லாம்.

இ-ள். ரிஷபம்-சிங்கம்-விருச்சிகம்-தனுசு-மீனம்- இவையிற்றில்செவ்வாயாதல் சனியாதல் நின்று வக்கிரித்தால் விசேஷித்து ராசாக்களுக்கு யுத்தமுண்டாம் வெள்ளிக்கு எ-மிடத்தில் வியாழம் நிற்கில் (சமசத்தம் உதகமென்று பெயராய்) சுபகாமங்களுக்கு விலக்கப்பட்டன படிகடக்குமென்பது வெள்ளி தெற்கேபோதல் சனிசெவ்வாய் நிற்கில் பஞ்சமாய் மனுஷர் மாய்வர், எ-று. 270

நாடுங்கதிர்பொன் சனிசேயை நணுகிமாதம்நாலரைப்பின்
னேடுங்கோட்கள் வக்கிரமா முறைக்கிற்பிரியுமெட்டரையாந்
தேடுங்கதிர்க்குமுன்புகரோன் செல்லச்செவ்வாய்பின்செல்லி
லோடுங்கோட்கள் பூபட வெள்ளி வெள்ளமழைசால.

இ-ள். வியாழந் சனி செவ்வா யிவற்றுடனே ஆதித்தன் கூடில் நாலரை மாதஞ் சென்று இவர்கள் வக்கிரகத் தடைகுவார்கள் ஆதித்தன் கூடி நின்ற மாதமுதல் எட்டரை மாதத்தில் வக்கிரகம் நீங்குமென்க ஆதித்தனுக்கு முன் வெள்ளி செல்ல செவ்வாய் பின் செல்லினும் பூராடத்தில் வெள்ளி நிற்பினும் வெள்ளமாக விருக்கும், எ-று. 271

கிரகம் பரிவேஷக்குறி.

சாலவுருக் கனுதயத்துச் சாறில்வட்டந்தானழிவா
மேலையுச்சிவிளைவுண்டாம் வெய்யோன்பாட்டிலரசழிவா
மாலைமதியைப்பரிவேடம் வளைக்கிலடுக்கமழைபொழிதல்
சோலமுலையாய்படைவேந்த குடைசாயந்திடுதல்பிழைவருதல்.

இ-ள் ஆதித்தனை யுதைய காலத்தில் பரிவேஷிக்கில் வருஷமில்லை உச்சி காலத்திற் பரிவேஷிக்கில் விளைவுண்டாம் மத்தியான காலத்தில் பரிவேஷிக்கில் அரசருக்கழிவுண்டாம் மாலை மதியைப் பரிவேஷிக்கில் அடுத்து மழைபொழியும் அரசக்கீர்த்திக்கு அழிவாகும், எ-று. 272

பிறையாமதியைப்பொன்வெள்ளி யுடனேவளைக்கிற்பெருமழையா
மழைதான்குட்டுஞ்சிறிதாகில் மதியைச்சனிசேயுடன்வளைக்கிற்
பழிதான்பசிநோய்பலவுளவாம் பாம்புதீண்டும்பொழுதளவே
லவுவாமாசர்கதைவிட்டா லினத்துநாட்டுக்கழிவாமே.

இ-ள். சந்திரனைச் சுக்கிரன் வியாழத்துடனே பரிவேஷிக்கில் வருஷம் பரிவென்க வட்டஞ் சிறிதாகில் மழைதாட்டும் சந்திரனைச் சனி செவ்வாயுடனே வளைக்கிற் பசியும் நோயும் பெருக்கவுண்டாம் கிரணைந் தீண்டும்பொழுது வளைக்கில் ராசாக்களுக்கு அழிவுண்டாம் விட்டபோது பரிஷிக்கில் நாட்டுக்கழிவுண்டு, எ-று.

நட்சத்திர விழுகுறி.

ஆடுகயல்தேள் தனுசிங்க மெழிபின்விழுமேலரசழிவாங்
கோடுமகரந்துலையலவன் கும்பமக்கங்குறைந்திடுமால்
தேடுமிதுனமந்திரிசாந் தெரிவையுதையம்பிணிபெரிதா
மோடுமிடபமழைபில்லை யுடுவீழ்குறியென்றுணர்ந்துறையே.

இ-ள். மேடம் மிதுனம் விருச்சிகம் தனுசு சிம்மம் இவை யுதையமாக நக்ஷத்திரம் விழில் ராசாக்களுக் கழிவுண்டாம் மகரம்

துலாம் கடகம் கும்பம் இவை யுதையமாக விழில் மந்திரி மரணம் கன்னியில் விழில் வியாதியுண்டாம் ரிஷபத்தில் விழில் மழை யில்லை, எ-று. 274

பிறைக்குறி.

உரைசேர்பிறைமீதின்மேடத்தி லுயருந்தெற்குவிடைமிதுனம்
விரைசேர்குழலாய்சமநோக்கு மிக்கதெல்லாம்வடக்குயரும் [பசியா
பெரியோர்சொன்னநெறியொழியப் பிறைகாண்டோற்றிற்பெரும்
கரைசேர்பக்கமொன்றிரண்டுங் கதிர்பொன்புகருகாண்பிறையே

இ-ள். பங்குனியுஞ் சித்திரையும் பிறைகாணத் தெற்குயரும் வைகாசி ஆனியுஞ் சமனாகும் மற்ற வெட்டு மாதமும் வடக்குயரும் இதிற் சொன்ன நேரொழிட விபரீதமாகில் பூமியெல்லாம் பசியா மலேமாயும் பிறைகாணலாவது பக்கங்களில் விதியையும் கிழமை களில் ஞாயிறு வியாழம் வெள்ளியுமென்ப விசேஷித்துள சதுர்த் தசியில் சுகப்படும், எ-று. 275

மகவோட்டம்.

காணுமாசிகலைமதியங் கருதுமகமீனன்கிணையும்
பேணுந்தென்பால்மீன்சேரிற் பெரிதாமக்கமிரண்டாமீன்
பூணிலொன்றுமுக்காலாம் பொருந்துமூன்றிற்பாதியதாஞ்
சேனின்வடபால்மீன்செறற் செகத்திலக்கஞ்சிறிதென்ன.

இ-ள். மாசிமாதத்தில் மகத்து நின்று சந்திரன் மகநக்ஷத்தி ரத்திலே தெற்கு மீனைச் சேரில் மிகுந்த லக்கம் இரண்டாம், நக்ஷத் திரத்திலொன்று முக்காலாம் மூன்றும் நக்ஷத்திரத்தில் ஒன்று பாதியாம் எல்லாத்துக்கும் வடக்கு நட்சத்திரத்திற் சேரில் ஒன்று காலாம், எ-று. 276

வியாழ சரிதை.

சிறியவேடங்குருவாகிற் றேசமெங்குட்வினையுண்டாம்
குரியகுண்டைபொன்சேரிற் கொண்டற்பொழியுங்கோபல்கும்
பொறிகொள்மிதுனங்குருகிற்கிற் பொன்முத்தரிதாஞ்சூலாணுங்
கறவைபூசல்மழைபெரிதாங் கடகஞ்சிங்கங்கடும்பசிநோய்.

இ-ள். வியாழம் மேடத்தில் நிற்கும்போது (ஐப்பசியென்னு மாண்டாம் அவ்வாண்டில் (வருடங் குறைவறப்பெய்து தேசமெ

ல்லாம் விளையும், ரிஷபத்தில் நிற்கும்போது கார்த்திகை யென்னுமாண்டாம் அவ்வாண்டில் அடைமழைபெய்து காலிபல்கும் மிககன்றுவிளையும் மிதுனத்தில் நிற்கும்போதுமார்கழியென்னுமாண்டாம் அவ்வாண்டில் பொன்னு முத்துங்குறையும் சூல்கொண்ட கர்ப்பம் ஆணாகப்பிறக்கும் பசுபால் கறக்கும் யுத்தமுண்டாம் மழைவுண்டாம் கடகத்திலும் சிங்கத்திலும் நிற்கும்போது தையென்னும் மாசி யென்னுமாண்டாம் அவ்வாண்டில் விளைவின்றி பசியும் நோயும் பெரிதாகும், எ று; 277

நோக்கும்பொன்னின் கன்னியுரில் நூலுந்தூசு மெளிதாகுங், கோக்குங்கொண்டல் விளையுண்டாங் குறையும் பருத்தியுப்புடநெய், யாக்குந் துலையின்மழை பெரிதாயாளப்மெலியு நிறைகுறையும், வீக்குந்தேளில் பசிமிடிநோய் வில்லில்மழைபோர் மிகவுண்டாம்.

இ-ள், வியாழம் கன்னியில் நிற்கும்போது பங்குனியென்னுமாண்டாம் அவ்வாண்டில் மிகவும் மழைபெய்து விளைந்து அக்கம் பெரிதாம் நூலும் புடைவையும் எளிதாகும் பருத்தி உப்பு நெய் குறையுமென்க துலாத்தில் நிற்கும்போது சித்திரையென்னுமாண்டாம் அவ்வாண்டில் மிகவும் வருஷம்பெய்து நானாவித தானியமு மிகவுண்டாம் அக்கம் பொருந்து அளப்பனவெல்லாமலிந்துநிறுப்பனவெல்லாங் குறையுமென்க விருச்சிகத்தில் நிற்கும்போது வைகாசியென்னு மாண்டாம் அவ்வாண்டில் வருடமின்றி விளைவுங் குன்றிப் பசிநோய் மிகவுண்டாம் தனுசில் நிற்கும்போது ஆனியென்னிமாண்டாம் அவ்வாண்டில் வருடமிகப்பெய்து குளங்களெல்லாம் உடைக்குற்காலம் நாற்காலமாய் எங்கும் விளைந்து ராசாக்களுக்கு எங்கும் பூசலுண்டாம்.எ-று. 278

மிகவிமகரம் பொன்சேரின் மிடியோர் பெரிதாய் விளைவில்லை, யகலுங்கும்ப மனை மழையாயக்கம் பெருக்கு மீனத்திற், பகைநோய் பசியாய் விளைவின்றிப் பரிமாவானை மிகமாயும், புகனிமாடைப் பசிமுதலாய்ப் புரட்டை ஈறும்புவிக் கெல்லாம்.

இ-ள். மகரத்தில் வியாழம் நிற்கும்போதுஆடியென்னுமாண்டாம் அவ்வாண்டில் வருடமின்றி விளைவின்றிப்பசிப்பெருக்கமுண்டாய் பருத்தியுமெள்ளுமலியுமென்க கும்பத்தில் நிற்கும்போது ஆவணியென்னுமாண்டாம் அவ்வாண்டில் அடைமழையாய் எங்கும் விளைந்து தானியம்பெருக்கும் மீனத்தில் நிற்கும்போது புரட்

டாசி என்னுமாண்டாம் அவ்வாண்டில் விளைவின்றிப் பஞ்சமாய் யானை குதிரை பசியாலும் நோயாலும் மாயும் இப்படி அற்பிசி முதல் புரட்டாசி ஈறுக மேடமுதல் மீனமீறுக எண்ணிக்கொள்வது, எ-று. 279

சுக்கிரசரிதை.

பவியில்மரிசேயாழலவன் புகரோணிற்கிற்புயல் பெரிதாங், குவைகோளரிபெண்துளியில்லைக் கோள்தேள் வெள்ளங் கொடுஞ் சிலைமேற், றுவலைதோன்றிற் றுளியாய்ப்போஞ்சுறவுங் குடமீனம் நவயில்வெள்ளி நின்றிடுமேல் நாளுநாளுமழைபெரிதாம்.

இ-ள். மேஷமுதல் நாலிராசியில் வெள்ளிநிற்கில் வருஷமுண்டாம், சிங்கங்கன்னியில் நிற்கில் வருஷமின்றி விளைத்தவிளையுந் தீயுமென்க, துலாம்விருச்சிகத்தில்நிற்கில் வெள்ளம்போம், தனுசில் நிற்கில் வருஷந் தோன்றித்துளியாய்ப்போம், மகரமுதல் மூன்று ராசியினும் நிற்கில் அடைமழைபாம், எ-று. 280

சனிசரதை.

பெரியகுதிரை சனியேறிற் பெய்யுமாரிதுயா தோன்றல், குறி தாம்பரணிவினைவுடனே பொருவாமால் முதல் மூன்றுங், கரியே நனிற்கின்மனு மாய்ந்து கார்தாடவர்க்கு மாதிரையிற், சொரியா நிறகுமழைபுகர்தந் துளியும் விளையுமளவாமே.

இ-ள். அசுவதியில் சனிநிற்கில் வருஷம்பெய்துவிளையும், பரணியில் அழிவுண்டாம், எல்லாத்தானியங்களும் விளையும் கார்த்திகைரோகனி மிருகசீரிடம் இந்நாட்களில் நிற்கில் வருஷமின்றிப் பஞ்சமாம் மனுமாயும் திருவாதிரையில் நிற்கிற் வருஷங்குறைவறப்பெய்து தேசமெல்லாம் விளையும் புனர்பூசத்தில் வருஷமும் விளையும் மத்திமமாய்க்கீழ் சாதிப்பல்கும், எ-று. 281

அளவிற்பூசஞ் சனிபெய்தி லற்பம்விளை வாயகம்பல்கும், வளமிலாமகம்பூர மாயுமறுத்துமனுமாயுங், களவஞ்சனியுத்திரமெய்திக் கார்சற்றுகியெட்டபயறு, விளைவுமத்தமுதனன்கும் வெள்ளம் பெறுத்துமிடிதீரும்.

இ-ள். பூசத்தில் சனிநிற்கில் விளைவற்பமாய் மிருகங்களும் கீழ்மக்களும் பல்கும். ஆயிலியம் மகம்பூரம் இவையில் சனிநிற்கில் வருஷமின்றித் தேசத்தில் மனிதர்பசியாலும் வியாதியாலும் மரணமடைவரென்க. உத்திரத்தில் நிற்கில் மழையற்பம், எள்ளு பயறு

வாகுவிளையும். அத்தமுதல் நான்கும் வருடங் குறைப்பெய்துதேச மெங்கும் விளைந்து அஃமும் பெருகும், எ-று. 282

திரிலன்பனையேறிற் றென்னைக்கழிவுவிலவுண்டாங்
காரிகோட்டைமுதலேந்துங் கருதிப்பசிநேய்பகைபெரிதாம்
வேரியிட்டமுதன் மூன்றும் வெள்ளம்பெரிதாய்விளையும்பார்
பாரிலரிவன்கதஞ்சனிபோற் பசியான்மாயும்படியெல்லாம்.

இ-ள். அனுடத்தில் சனி நிற்கில் வருஷித்துக் குளங்களெல்லாம் நிறைந்துவிளையும் பாண்டியனுக்கழிவுண்டாம் குறும்புக்கழிவென்க கேட்டைமுதல் ரு-நாளிலும நிற்கில்வருடமின்றி எல்லாந்தீய்ந்து மனுஷரெல்லாம் பகைபாலேயாயும் அவிட்டமுதல் ௩-நாளிலும நிற்கில் தேசங்குறைவற விளைந்து கன்றுகாலியும் பல்கி மனுஷரெல்லாம் சுகமே யிருப்பார்கள் உத்திரட்டாதி ரேவதி இவையில் நிற்கில் வருடமின்றி மனுஷர் நோயாலும் பசியாலும் மரணமடைவர் இநிற்சொன்ன பலன் செவ்வாய்க்கு மொக்கும், எ-று. 283

புதனோட்டம்.

படியிற்கும்பம்விடைமீன மேடப்பருமமுன்னோடு
நெடியதண்டின் முதனான்கு முடனேனின்று பின்னோடுங்
கடியகதிறைப்புதன்பிரிதல் கதிரோனொன்றிற் புணர்ந்திடுதற்
கொடியினிடையாய்ப்புகர்தெற்கே வுறுதற்பஞ்சக்குறியாமே.

இ-ள். கும்பம் ரிஷபம் மீனம் மேடம் இவ்விராசியில் புதன் ஆதித்தனுக்கு முன்னேயோடும் மிதுனமுதல் ௪-இராசியும் ஆதித்தனுக்கு பின்னேவோடும் இவவகையொழிய ஆதித்தனுக்கு முன்னோடுவது பின்னோடினும் உடனிற்பது பிரிந்திடினும் பின்னோடுவது முன்னோடினும் வெள்ளி, தெற்கேபோம் நாளும் வருடமில்லை, எ-று. 284

கோள்நிலை

குறித்தகதிரோன்புகர்புந்தி குலவிநிற்கு மொருமாதஞ்
செறித்தமதினு ளிரண்டேகாற் செவ்வாய்மாத மென்றமையாம்
கறுத்தசனிபாண்டிரண்டரையாங் கனகன்றூனுமோராண்டா
மிருத்தபாம்பாண்டொன்றரையா மிராசியொன்றில் நின்றிடுநாள்.

இ-ள். ஆதித்தன் புதன் சுக்கிரன்ராசில் ஒருமாதம் நிற்பார்கள் சந்திரனிரண்டேகால் நாள்நிற்பன் செவ்வாய் ஒன்றரைமாதம்

சனியிரண்டரைவருடம் வியாழம் ஒருவருடம் ராகுகேதுவொன்ற ரைவருடம் நிற்பார்கள், எ-று. 285

மனைப்பொருத்தம்

காட்டுமூற்கு மனையதற்கும் நலங்கோலெட்டெட்டரை செய் தால், மீட்டுநடுவுநாலறையும் விரிஞ்சன் மூலுநாலுமபர், மீட்டுந் திசைகளொருநான்கி விருநான்கறையு மிறைவற்காம், கோட்டு நாற்பத்தெட்டறையுங் குணமாய்க்கொள்கக் குலமனைக்கே.

இ-ள். எற்றுகின்றவூரையும் எடுக்கின்ற மனையையும் சஅ அறையாக்கினால் நடுவில் ச-அறையும் பிரமஸ்தானம் நாலுமூலையும் தேவர்க்காக்கும் திக்குநான்கில் அ-அறையும் இந்திரன்முதலெண் பருக்காம் மற்ற சஅ-அறையும் மனைக்குக்கொள்வது, எ-று. 286

மனையைச்சிறுகோலாலளந்து வந்தகுழிபின் பேராயா
மனையையெட்டாற்பெருக்கிப் பன்னிரண்டாற் கழித்ததுவாக்கம்
மனையையொன்பதாற்பெருக்கிப் பத்திற்கழித்தழிவாகும்
நினையின் மூன்றாற் பெருக்கியெட்டுக் கீய்ந்தசேடம் நிலையோனி.

இ-ள். மனையை சிறியகோலாலே யளந்து கண்டகுழியின் பேர் ஆயமாம் அவ்வாயத்தை அ-ல் பெருக்கி கஉ-ல் கழித்துநின் றதன்பேராக்கமாம் ஆயத்தை கூ-பெருக்கி க0-ல் கழித்தது அழி வாம் ஆயத்தை ந-ல் கழித்தது நின்றசேடம் யோனியாம், எ-று.

நிலகேளாய்மெட்டேற்றி நெறிமூவொன்பான்கழித்ததுநா
ளிவருஞ்சிலநான்காற்பெருக்கி மூவைந்ததனுர் கழித்ததிதி
யிலகுமொன்பானுடனேற்றி யேழிற்கழித்த ததுகிழமை
யுலவிமூ வொன்பற்பெருக்கி யொன்பார் கழித்தங்கசமே.

இ-ள். முன்புசொன்ன ஆயத்தை அ-ல் பெருக்கி உடு-ல் கழித்து நின்றசேடம் நாளொன்பது ஆயத்தை ச-ல் பெருக்கி கரு- கழித்தசேடம்பக்கம் ஆயத்தை கூ-ல் பெருக்கி எ-ல் கழித்து நின்ற சேடம் கிழமை ஆயத்தை உஎ-ல் பெருக்கி கூ-ல் கழித்துநின்ற சேடம் அங்கம், எ-று 288

அஞ்செசாவிருபத்தேழ்பெருக்கி நூற்றிற்கழித்ததுவாளுள்
செஞ்சொலபஞ்சிலுலவானம் வரிஇுமாக்கஞ்சிலுத்தழியு
மிஞ்சுமெனிஇும்யோனிநாள் பக்கங்கிழமையெய்திடினும்
வஞ்சுமானவஞ்சகங்கள் வாணுட்குறைதல்மனைக்காகா.

இ-ள். ஆயத்தை உள-ல் பெருக்கி ா-ல் கழித்து நின்ற சேடமாம், மனைக்கு ஆயுளென்பது இயற்றிலாயஞ் சிலவரினும் ஆக்கஞ் சிறந்து அறிவு பெறுக்கினும் யோனி நாள் பக்கங்கிழமை பொல்லாதவைரினும் அங்கம்பொல்லா தவைவயினும் ஆயிசுகுறையினு மனைக்கு ஆகாது. 288

யோனியறிதல்.

ஆகுங்கிழக்கு முதலெட்டுபரிந்து பூனையரி சுணங்க, ஞகங் கருப்பைகரிமுசலாம் யோனிநல்லனுற்றிசையு, மேகஞ்சேர்தற்கற முணர்வு சத்திவினைவோடரசிடர்நோய், சோகஞ் சுகமற்றிவற்றி னுள் சத்திவினைவு சுகம் நன்றும்.

இ-ள். யோனியும் அங்கமும் அறியும்படி கிழக்குப்பருந்து தென்கிழக்குப்பூனை தெற்குச் சிங்கம் தென்மேற்குப் பாம்பு வடமேற்கு எலி வடக்குயானை வடகிழக்குமுசல் ஆகயோனி எட்டுங் கண்டு கொள்க இவையிற்றும் பிருந்தும் சிங்கமும்பாம்பும் நன்றென்பது அல்லாதவை தீதென்பது எ-று. 289

அங்கமறியும்படி.

| | | |
|---|---|---|
| க-க்கு கற்கரம் | பிரமா | தருமவிர்த்தி |
| உ-க்கு புத்தி | க்ஷத்திரியன் | மந்திராலோசனை |
| ங-க்கு றக்ஷகம் | வைசியின் | சத்தியம் |
| ச-க்கு தானியம் | சூத்திரம் | ஈகை |
| ரு-க்கு வெற்றி | பாஷண்டி | நாபதி இடி யோய் |
| சா-க்கு துன்டம் | சண்டாளன் | பாபகுணம் |
| எ-க்கு ரோகம் | வேசி | பாபகுணம் |
| அ-க்கு தரித்திரம் | விப்பிரன் | சமசுகம் |
| சு-க்கு தனம் | பசுக்குலம் | பாக்கியம் |

இவை யொன்பதுங் கண்டுகொள்க இவற்றில் சத்தியும் வினைவும் சுதமும் நன்றும் அல்லாதவைதீது. 290

வாஸ்துபுருஷன்.

நன்றுங்கிழக்கு முதலெட்டுமட்டில் நல்லான்றுழுக்குப்பை. குன்றுப்படப்பை மெருமைறிலை தொழுநெற்கூடுணிடம் நீர்சால்,

என்றார்மனைக்குங் கிணறுகிழக்கீசன் மதிநீரொழிற்கிழவன்,றன்றாட்
கதிர்மேல் நீட்டித்தலைவைத்திடங் கீழ்தான் கிடக்கும்.

இ-ள். கிழக்கே அடுகளைக்கொள்வது தென்கிழக்கே பசுத்தொழும் தெற்கே குப்பையிடுவது தென்மேற்குத் தொப்புமேற்கு எருமைத் தொழுவிடுவது வடமேற்கே நெற்கூடு வடக்கே போசனசாலை வடகிழக்கே தண்ணீர் சாலைவைப்பது மனைக்குக் கிணறு வெட்டில் கிழக்கும் சுகம் வடகிழக்கின்பம் வடக்கு சவுக்கியம் மேற்குச் சம்பத்து தென்மேற்கு கலம் வடமேற்கு ஆயுதத்தால் மரணம் தெற்கு ஸ்திரீமரணம் தென்கிழக்குப் புத்திரஹானி பிரமஸ்தானத்தில் அர்த்தஹானியென்று சொல்வது, வாஸ்துபுருஷன் கிடக்கும்படி ஆதித்தனின்ற ராசியின் பேரிலே கால்நீட்டி அதற்கு எதிராசியிலே தலைவைத்து இடக்கை கீழாகக்கிடக்கும்.

கிடந்தான்மேடமொருபத்திற்கிளரும் விடையின்மூவேழு
லடங்கோல்கடகம் பதினொன்றிலரியோராறிற்றே ளெட்டிற்
குடந்தானிருபத்தொன்றைதனிற் கூறுமகரம் பன்னிரண்டி
லிடந்தானெடிக்கலாமென்றா ரெல்லாத்திசையுநல்லோரே.

இ-ள். வாஸ்துபுருஷன் எழுந்திருக்கும் நாள் சித்திரைமாதம் ௧௦௳ வைகாசிமீ ௨௧௨ ஆடிமீ ற்பிசிமீ ஆவணிமீ ௬௳ கார்த்திகைமீ ௮௳ தைமீ ௧௳ மாசிமீ ௨௧௳ இவையீற்றில் எங்கும் அகமெடுக்கலாம் எ-று. 292

சுவர்பிளப்பு.

நல்லமனையிற் சுவர்பிளக்கி லருக்கன் றிசையி னாசந்தே
யல்லலூறும் பொன்சாவுபுத னழகாம்புகர்மே லாக்கமதாங்
கொல்லுங்காரிமதி யியங்கூறுறும் பாம்பாலெனைக்கொள்க
வெல்லையருக்கன்சேய்பொன்மால்புகர்சனி மதியாம்பெண்டிசைக்க

இ-ள். அகத்திற் சுவர்பிளத்தில் கிழக்குநாசம் தென்கிழக்கு அல்லல் தெற்குமரணம் தென்மேற்கு அழகு மேற்கு ஆக்கம் வடமேற்கு சாவு வடக்கு அர்த்தலாபம் வடகிழக்கு ஸ்திரீமரணந் திக்குயெட்டும் கிழக்கு ஆதித்தன் தென்கிழக்கு செவ்வாய் தெற்கு வியாழம் தென்மேற்குப் புதன் மேற்குவெள்ளி வடமேற்கு சனி வடக்குச் சந்திரன் வடகிழக்கு யாம்புகிலை எ-று, 293

### புற்று.

எண்டிசையுங்கிழக்கு முதலாகவெண்ணி
யிந்திரனக்கினி நிருதிவருணன்வாயு
வண்டமுறுமதி யீசனட்டதிக்குங்
கலம்நடுவேலயன் மேபுற்றெடுக்கில்
மண்டியபசாவிந்திரன் மேற்செல்வமக்கி
மணியிடியுமயன் றுயரன் நிறுதிவாழ்வு
கொண்டல்வருணன் மகவுகாற்றுக்கூற்றங்
குலமதியேனல மீசன்குறுகுநோயே.

இ-ள். எட்டுதிக்கிலும் கிழக்கு இந்திரன் தென்கிழக்கு அக்கினிதெற்குயமன். தென்மேற்கு நிருதிமேற்கு வருணன் வடமேற்கு வடக்குச்சோமன் வடகிழக்கீசானன் நடுபிரம்மஸ்தானம் இவையீற்றில் பின்புநட்டஞ் சொல்லும்பொழுது இன்னதெய்வத்தின் பெயருடையோனென்றும் தேவசிந்தனைகளும் இவையீற்றிலே பிரம்மஸ்தானத்தில் புற்றெடுக்கிற்சாவு இந்திரன் செல்வம் அக்கினிமனையிடியும் யமன் துக்கம் நிருதிஸ்திரீசாம் வருணன புத்திரலாபம் வாயு கூற்றும்சந்திரன நன்மை ஈசானன் வியாதியென்று சொல்வது, எ-று. 294

### செஞ்செல்லு.

குறுகியசெஞ்சிதலயன் மேற்றோன்றில்நன்றாங்
கொடுங்கதிர்கேடங்கியிடு நிதிகாலனின்பம்
பெரும்நிருதிமழைவருணன் செல்வங்காற்று
பெண்போல்குமதி வாழ்வுபீடையீசன்
கறைவிடமுறின்மிகக் கீழ்க்காலிமாயுங்
கட்டிற்படிசாலின் கீழட்டில்நோயா
மிறைவரிடமூருணியம் பலன்கள்பன்னி
லெழில்நாடுகெடுஞ்சுவர் மேலெங்குநன்றே

இ-ள். பிரம்மஸ்தானத்தில் செஞ்செல்லுந்தோன்றில் நன்மை கிழக்குக்கேடு அக்கினி நிதிபெருக்குயமனின்பம் நிருதிமழை வருணன் செல்வம் வாயுஸ்திரீயைப்போக்கும் சந்திரன் வாழ்வு ஈசானன் பீடை கன்றுகாலித்தொழுவல் கன்றுகாலி நாசம்கட்டிற்கீழ் வாசற்படிக்கீழ் அடுக்களைகிழிவை வியாதி தேவஸ்தானம் ஊருணி அம்பலங்கள் பன்னியிடம் பன்னியிடம் இவற்றிற்றோன்றில் நாடு கெடும் சுவர்மேற்றோன்றில் மிகவும் நன்று, எ-று. 295

## கோடிகிழியில் நன்மைதீமை.

நற்கோடிகிழியின்மடி மூன்றுசெய்து
நயந்தகடைத்தலை கீழாக்கிழக்கேவைத்துப்
பொற்கோடிமுகமேலாய் மேற்கேவைத்துப்
பூவிலயன்கொலையருக்கன் செல்வநடுபுதல்வர்
அற்கோலமனைவெகுமயனி லிடையின்ப
மழலெரிக்குமிரவிக்கு நடுவிற்றுரிடருந்
தெற்கோடிச்சாவிதற்கு மெரிக்குமிடைதுன்பஞ்
செழுமலரோற்கிடையினி தென்மேற்சிறுவர்பெருமே

இ-ள். புதுப்புடவைபீறினால் மூன்று மடியாக்கிக் கடைத்தலையைக் கீழ்க்கிழக்கே வைத்து முகத்தலை மேலாக்கி மேற்கேவைத்து பார்த்தால் பிரம்ம ஸ்தானமாகில் மரணம் ஆதித்தனிற் செல்வம் இவை யிரண்டுக்கும் நடுவாகில் புத்திரருண்டாம் அக்கினியில், அகமேறும் அக்கினிக்கும் பிர்மாவுக்கும் நடுவின்பம் அக்கினிக்கும் மாதித்தனுக்கும் நடுபந்துக்கள் விதனம் யமனிற்சாவு யமனுக்கும் அக்கினிக்கும் நடுதுக்கம் யெமனுக்கும் பிரம்மாவுக்கும் நடுவியாதி நிருதியில் புத்திரலாபம், எ-று. 296

பெறுநதிகாலனிடை பகைமலரோனடுவேற்
பேரின்பம்வருணநிதி நிருதிநீரிடையி
நறுநுதல்போயனிடையிற் புடவைகாற்றி
நட்டார்நீள்மனம் நான்முகன்காற்றிடைநோய்
நிறைமதிகேடயனிடையிற் பிணிமதிகாற்றிடையி
நேராற்கேடிசநலம் நிலாவீசற்கிடையி
னுருபொருள்போமயனீசற் கிடையிலின்ப
மொண்கதிரோற்கிடைநன்று முற்பிடைவகிழியே. ௬

இ-ள். நிருதிக்கும் யமனுக்கும்நடு சத்துருவுண்டாம் நிருதிக்கும் பிர்ம்மாவுக்கும் நடுவின்பம் வருணன் அர்த்தலாபம், வருணனுக்கும் நிருதிக்கும் நடுஸ்திரீபேறு. வருணனுக்கும் பிர்மாவுக்கும் நடுமரணமுண்டாம், வாயுவில் பந்துக்களுண்டாம் வாயுவுக்கும் வருணனுக்கும் நடுகலியாணமுண்டாம் வாயுவுக்கும் பிர்ம்மாவுக்கும் நடு சம்பத்துண்டாம் சந்திரனிற் பிள்ளைகள் சந்திரனுக்கும் பிர்ம்மாவுக்கு நடுசம்பத்து சந்திரனுக்கும் வாயுவுக்கும் நடுநாசம் ஈசானனில் நலம், சந்திரனுக்கும் ஈசானனிற்கும் நடு அர்த்தநாசம் ஈசானனுக்கும் நடு இன்பம் ஈசானனுக்கும் ஆதித்தனுக்கும் நடு நன்மையுண்டாம் எ-று. 297

சுரிகைலக்ஷணம்.

கிழக்குநெடுஞ்சுரிகை கதிர்மேல்வினகிற்சிறங்காங்
 கெழுமுநலங்குலம்வணிகன் பகைகேடுபறையன்
விழிக்குநமநலம்பெருகுமுஜேயிற் குறைவாகும்
 வேளாளநிருதியின்மேல் மிடிபெருகும்புலையன்
சுழிக்குநெடுவிராசனது செல்வமுண்டாஞ்
 சுழல்வளியிற்கீழ்சாதி துயரமிஞ்சும்
பழிப்பின்மதிதனம் பெருகுங் குலமும்பார்ப்பான்
 பாம்பின்மேற்பறைச்சாதி பழியொடுகேடுளவாம்.

இ-ள். ஆயுதங்கொண்டு ஆதித்தனின்ற திசையிலே நின்று வினவில் சிரங்குண்டாமென்பது, சாதி வைசியனென்றும் காரியம் லாபமுண்டாமென்றும் சொல்வது. அக்கினியால் சாதிபறையனென்றும் காரிய தேசமுண்டென்றுஞ் சொல்வது, யமன்றிசையில் குறைவுண்டென்றுஞ் சூத்திரனென்றும், அர்த்தலாப முண்டென்றுஞ் சொல்வது ச-வது நிருதியில் வினவில் மனமிடியன் சாதிபுலையனென்றுஞ் சொல்வது வருணனில் ஸ்திரீயுண்டென்றும் ஜாதி க்ஷத்திரியனென்றுஞ் சொல்வது வாயு கீழ்சாதி யென்றுந் துக்கமென்றுஞ் சொல்வதுசோமனில் அர்த்தலாபமுண்டென்றும் ஜாதி பிராமணனென்றுஞ் சொல்வது பாம்பிற் சாதி பறையனென்றும் பழிகேடுளவென்றுஞ் சொல்வது, எ-று. 298

பஞ்சபக்ஷிப்பலன்.

சந்திரன் பக்கம்-ரு-க்கும் வாரம்-எ-க்கும் அக்ஷரப்புணர்ச்சி

எள்ளங்கொள்நந்தகதிர் செவ்வாய்காரமோங்கும் பத்திரைமால், தளங்கொள்மதியந்தாணிகாஞ்சனையும் பொன்னு முகாரமதாம், விளங்குமிரத்தைப்புகரொகாரம் வெய்யசனே பூரணையொகரங், துளங்கு மிடையா யப்பகர்கடிகை யவ்வாறிவை யூண்சொன் முறையே.

இ-ள். நந்தை ஞாயிறு செவ்வாய் அகரம், பத்திரை புதன் திங்கள் இகரம் சயையும் வியாழம் உகரம், ரித்தையும் வெள்ளியும் எகரம் எகாம் பூரணையும் சனியும் ஒகரம் இவையீற்றிற்சொன்ன கிழமையிலும் பக்கங்களிலும் உதையாதி முதலாக அஸ்தநமன் குறுதியாக ஒவ்வொன்று ஆறு நாழியாக முப்பது நாழிகையும் அடைவே யுண்பார்கள், எ-று. 299

அக்ஷரப்புணர்ச்சி சக்கரம்.

| வாரம். | உண்டி. | நடை. | அரசு. | நித்திரை | மரணம் |
|---|---|---|---|---|---|
| நந்தை ஞாயிறு செவ்வாய். | அ | இ | உ | எ | ஒ |
| பத்திரை திங்கள் புதன். | இ | உ | எ | ஒ | அ |
| சயை வியாழம். | உ | எ | ஒ | அ | இ |
| இருத்தை வெள்ளி | எ | ஒ | அ | இ | உ |
| பூரணை சனி | ஒ | அ | இ | உ | எ |

அக்ஷரம்-ஐந்திருக்கும்-பக்ஷிப்புணர்ச்சி.

சொன்னவகாரம்வல்லூறுண் டிய்யவிகாரமாந்தையூண், முன்னையுகாரம் வலியனான் மொழியிலெகாரங் கோழியிக்ஷிண. பன்னுமொகரமயிலாணும் பண்டையடைவே பறவைகளொன், றுன்னுமிரண்டு நடைமுடிமூன் றுறக்கநாலுசாவைந்தே.

இ-ள். குறுக்குவரியாக ஆறுகோடிழுத்து அவ்வகையேநெடுகிலேயும் ஆறுகோடிழுத்துச் சதுரமாக்கி ஒவ்வொரு திசைக்கு ஐந்துவீடாக்கி முதல்வீட்டில் அகரமாகிய வல்லூறுனும்-இரண்டா வீட்டில் இகரமாகிய அந்தயூனும், மூன்றும்வீட்டில் உகரமாகிய காகமூனும்-நான்காம் வீட்டில் எகாரமாகிய கோழியூனும்-ஐந்தாம் வீட்டில்-ஒகாரமாகிய மயில்யூனும் அன்றியும் இவ்வடையே, யுண்கிறபட்சி இரண்டாம் வீட்டில் நடக்கவும், மூன்றும்வீட்டில் அரசுசெய்யவும், நான்காம் வீட்டில் துரங்கவும், ஐந்தாம்வீட்டில் யிறக்கவும் ஆக இருபத்தைந்து வீட்டிலேயும் வாரம் ஒன்றுக்குப் பகல் சாமம் ஐந்துக்கும் பட்சிகளைந்தும் செய்கைகளைந்திலேயும் அமர்ந்திருக்குமென்னவுமாம், எ-று. 300

| வாரம் சாமம். | முதல் சாமம். | உ-ம் சாமம். | ங-ம் சாமம். | ச-ம் சாமம். | ரு-ம் சாமம். |
| --- | --- | --- | --- | --- | --- |
| ஞாயிர் செவ் வா நந்தை. | அ-வல்லூர் உண்டி-கவ | நடை-கஉ. * | அரசு-உ * | தூக்கம் தே * | சாவு-ஒ * |
| திங்கள் புதன் பத்திரை. | இ-ஆந்தை உண்டி-கவ. | நடை-கஉ * | அரசு-உ * | தூக்கம்-தே * | சாவு-ஒ * |
| வியாழம் சயை. | உ-காகம் உண்டி-கவ | நடை-கஉ * | அரசு-உ * | தூக்கம்-தே * | சாவு-ஒ * |
| வெள்ளி இருத்தை | எ-கோழி உண்டி-கரு | நடை கஉ * | அரசு-உ * | தூக்கம்-தே * | சாவு-ஒ * |
| சனி பூரணை | ஒ-மயில் உண்டி-கவ | நடை-கஉ * | அரசு-உ * | தூக்கம்-தே * | சாவு- * |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முதல் | அ | இ | உ | எ | ஒ |
| சாமம் | வல்லூறு | ஆந்தை | காகம் | கோழி | மயில் |
| * | அரசு | நடை | அரசு | நித்திரை | மரணம் |
| உ-ம் | ஒ | அ | இ | உ | எ |
| சாமம் | மயில் | வல்லூறு | ஆந்தை | காகம் | கோழி |
| * | உண்டி | நடை | அரசு | நித்திரை | மரணம் |
| ந-ம் | எ | ஒ | அ | இ | உ |
| சாமம் | கோழி | மயில் | வல்லூறு | ஆந்தை | காகம் |
| * | உண்டி | நடை | உண்டி | நித்திரை | மரணம் |
| ச-ம் | உ | எ | ஒ | அ | இ |
| சாமம் | காகம் | கோழி | மயில் | வல்லூறு | ஆந்தை |
| * | உண்டி | நடை | அரசு | நித்திரை | மரணம் |
| ரு-ம் | இ | உ | எ | ஒ | அ |
| சாமம் | ஆந்தை | காகம் | கோழி | மயில் | வல்லூறு |
| * | உண்டி | நடை | அரசு | நித்திரை | மரணம் |

வாக்கியாக்ஷரப்பொருத்தம்.

அஷ்டவிதயோனிப் பொருத்தமென்றுஞ் சொல்லப்படும்.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சார்ந்த அகாரங்ககாரமுடன் சகாரந்தகாரந் தானங்ஙன்
வாய்ந்தநகாரம் பகாரமிமைகாரம் வகாரமெட்டெழுத்தும்
வாய்ந்தபருந்து முதலியோனியிருநான்கினுக்குமடைவாகி
யேய்ந்தபோரும்வெற்றி யுந்தாமிதனுற்பறவையாலியம்பே.

